# பிள்ளையார் கதைகள்





நாகர்கோயில் கிருஷ்ணன்

# பிள்ளையார் கதைகள்



நாகர்கோவில் கிருஷ்ணன்

வதனு பப்ளிகேஷன்ஸ்

8. பரிபூரண விநாயகர் கோவில் தெரு,
மயிலாப்பூர், சென்னை-4

வெளியீடு எண் : 2.

முதற்பதிப்பு 1976

இரண்டாம் பதிப்பு 1978

விலை ரூ. 3-00

சீனிவாசா பவர் பிரஸ், 85, கச்சேரிரோடு, சென்னை-4.




# ஸ்ரீமுகம்

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்

காஞ்சிபுரம்

முகாம் : கரூர் 8—1—197

நாகர்கோயில் நூலாசிரியர் ஸ்ரீகிருஷ்ணன் எழுதியுள்ள "பிள்ளையார் கதைகள்" என்னும் நூலில் பார்வதி பரமேச்வரர்களின் மூத்தகுமாரராக அவதரித்த பிள்ளையாரின் மஹிமைகள். அதாவது மஹாபாரதத்தை தந்தத்தினால் எழுதியது தனக்குகந்த அருகம் புல்லின் மேன்மையை கௌண்டின்ய முனிவரின் மூலம் விளக்கியது, காகரூபத்துடன் காவேரி நதியின் ஆவிர்பாவத்துக்கு காரணமாயிருந்தது. கோகர்ண க்ஷேத்திரத்தில் இராவணனுக்கு அருளியது. அரசனின் அஹம்பாவத்தை அடக்கியது. அந்தண தம்பதிகளுக்கு அருள் புரிந்தது முதலியவைகள் மாணவர்கள் படித்து உணரும் வண்ணம் எளிய இனிய தமிழ் நடையில் பக்தி சுவை பொங்க பல மேற்கோள்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன.

மயிலாப்பூர் பரிபூரண விநாயகர் கோயில் தெருவிலுள்ள வதனா பிரசுலாயத்தினால் வெளியிடப்படும் இந்த சிறந்த நூலை ஆஸ்திகர்கள் முக்கியமாக மாணவர்கள் படித்து ஸ்ரீ விநாயகரை வழிப்பட்டுக் கொண்டும் இதில் போதிக்கப்படும் நற்குணங்களை வளர்த்துக் கொண்டும் இம் மூர்த்தியின் அருளால் எல்லா மங்களங்களையும் அடைவீர்களாக.

நாராயண ஸ்ம்ருதி



# பொருளடக்கம்



வேழமுகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுந்து வரும்
வெற்றிமுகத்து வேலவனைத் தொழப்
புத்தி மிகுந்து வரும்

# பதிப்புரை

பிள்ளைகள் கதைகள் கேட்பதிலும், படிப்பதிலும் சொல்லுவதிலும் மிகவும் ஆர்வம் கொண்டவர்கள். அப்படிப்பட்ட பிள்ளைகளுக்கு நல்ல கருத்துள்ள சிறந்த நூல்களை வெளியிட்டு ஊக்கமளிக்க வேண்டும் என்பது எனது நெடுநாளைய ஆசை. அதுவே பதிப்பகத்தார் கடமையுமாகும்.

அத்தகைய கடமை உணர்வைக் கொண்டு பிள்ளையார் கதைகள் என்னும இச்சிறுவர் நூலை காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் ஸ்ரீ முகன் அருள செய்ய வெளியிடுகிறோம்.

இரண்டாவது பிரதியாக பிள்ளையாரைப் பற்றிப் பிள்ளைகளுக்கு இந்நூலில் மிக அழகாக எழுதித் தருகிறார். பிரபல நாவலாசிரியர் திரு. நாகர்கோயில் கிருஷ்ணன் அவர்கள்.

விநாயக புராணம் என்னும் நூலிலுள்ள பெரிய வரலாறுகளைப் பிள்ளைகள் படித்து மகிழும் வண்ணம் எளிய, இனிய நடையுடன் பக்திச்சுவைபொங்க மிகவும் சுவாரசியமாக ஆசிரியர் எழுதியுள்ளார். புராண நூல்களில் உறைந்துள்ள அரிய பல விஷயங்களை மிக அற்புதமாக உரிய பல மேற்கோளுடன் எழுதுகின்ற ஆற்றல் திரு நாகர்கோயில் கிருஷ்ணனுக்கு உரித்தான தனித் திறமையாகும். இவ்வாசிரியரின் நூலை வெளியிடுவதில் உள்ளபடியே பெருமை கொள்கிறோம். பிள்ளைகளாகிய உங்களுக்கும் மகிழ்ச்சிதானே!

பதிப்பகத்தார்



# 1. கர்ண பரம்பரைக் கதைகள்

---

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது-பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

ஃ ஃ ஃ

துப்ஆர்-பவளம் போலும் (சிவப்பாகிய)
திருமேனி-திருமேனியையும்
தும்பிக்கையான்-துதிக்கையையும் உடைய
விநாயகக் கடவுளின்
பாதம்-திருவடிகளை
பூக்கொண்டு-(வழிபடுவதற்கு) மலர் எடுத்துக்
கொண்டு
தப்பாமல்-நாடோறும் தவறாமல்
சார்வார்-அடைந்து பூசை செய்வோருக்கு
வாக்கு உண்டாம்-சொல்வளம் உண்டாகும்
நல்ல மனம் உண்டாம்-நல்ல சிந்தனை உண்டாகும்

*மாமலராள்-பெருமை பொருந்திய செந்தாமரைப் பூவில் இருக்கும் இலக்குமியின்*
*நோக்கு உண்டாம்-அருட்பார்வை உண்டாகும்*
*மேனி-அவர் உடம்பு*
*துடங்காது-(பிணிகளால்) வாட்டமுறுது.*

என் அன்புப் பிள்ளைகளே! பிள்ளையாரைப் பற்றி இப்படிப் பாடியிருப்பது யார் என்று உங்களுக்குத் தெரியுமல்லவா! அவர்கள்தான் ஔவைப் பிராட்டியார்!

பிள்ளையாரின் பாதத்தை நினைத்துத்தான் நாம் எந்த ஒரு நல்ல காரியத்தையும் ஆரம்பிக்க வேண்டும். விநாயகக் கடவுளின் திருவடிகளைப் பூசிப்பவர்க்குக் கல்வியும், செல்வமும், நலமும் உண்டாகும். அப்படி ஆரம்பிக்கும்பொழுது நமக்கு வாழ்க்கையில் என்றென்றும் வெற்றிதான் கிட்டும்.

நீங்கள் கூட பரீட்சைக்குப்போவதற்கு முன்னல் பிள்ளையார் முன்னல் நின்று கொண்டு இரண்டு கைகளாலும் தலையில் குட்டிக் கொண்டு, காது இரண்டையும் கைகளால் பிடித்துக் கொண்டு தண்டால் பஸ்கி எடுப்பது போல் உட்கார்ந்து உட்கார்ந்து எழுந்திருப்பீர்களே' ஆமாம், தோப்புக் கரணம் போடுகிறீர்களே எதற்கு? பரீக்ஷையில் வெற்றிபெற வேண்டும் என்பதற்காகத்தானே! அது போலவே நாம் எழுதுவதற்கு முன்னல் "உ" இப்படி முதலில் எழுதுவது வழக்கம். அதற்கு பெயர்தான் பிள்ளையார் சுழி என்பது.

பிள்ளையார் சுழியின் பொருள் என்ன? முதலில் ஒருவட்ட வடிவமான ஒரு புள்ளியை எழுதி, இரண்டாவதாக அதன் தாழே ஒரு கோட்டை இழுத்தல் ஆகும். இவ்வாறு பிள்ளையார் சுழி போட்டு எழுதுவது நம் முன்னோர்கள் பழக்கம். இப்பிள்ளையார் சுழி ஒன்றே அவர் முழு முதற் கடவுள் என்பதனை நமக்கு விளக்குகிறது அல்லவா? நீங்கள் கூட பரீக்ஷைப் பேப்பரில் பிள்ளையார் சுழி போட்டுத் தானே எழுத ஆரம்பிக்கிறீர்கள்!

உங்களைப் போலதான் ஒவ்வொருவரும் அவரவர்கள் எடுக்கும் காரியம் நன்ருக அமையவேண்டும், எவ்வித இடையூறும் வரக்கூடாது என்பதற்காகவே அவருக்கு வணக்கம் செலுத்தி, தோப்புக் கரணம் போட்டு, சிதற்தேங்காய் உடைத்து வழிபட்டு ஒரு காரியத்தைத் தொடங்குகின்றனர்.

நாம் நம்மை அறிந்தோ அறியாமலோ செய்கின்ற நம்முடைய பாபங்கள் உருண்டு, திரண்டு தேங்காய்போல் இருப்பதால் அவைகளைத் தொலைக்க சிதற்தேங்காய்களை, உடைக்கின்ருேம.

விக்னங்களுக்கு ராஜஞன, அவர் விக்னங்கள் நம்மை வந்து சேராமல் காப்பாற்றுவார். விக்னங்கள் என்ருல் தடங்கல்கள். அதனுல்தான் அவரை விக்ன ராஜன் என்று அழைக்கின்ருேம்.

நாம் விநாயகர் சதுர்த்தி அன்று மண்பிள்ளையாரை வைத்துப் பூஜை செய்து கொழுக்கட்டைகள் நிவேதனம் செய்து வழிபடுகின்ருேம்.

இந்தப் பிள்ளையாரைப் பற்றி நிறையக் கதைகள் உண்டு என்ருலும் உங்களுக்கு ரொம்பப் பிடித்தமான சில கதைகளை மட்டும் சொல்லப் போகிறேன்.

முதலில் பிள்ளையாரைப் பற்றிய சில சுவையான கர்ணப்பரம்பரைக் கதைகளை உங்களுக்குச் சொல்ல போகிறேன்.

கர்ண பரம்பரைக் கதைகள் என்று சொன்னால் ஒருவர் மற்றொருவருக்குச் சொல்ல அவர் இன்னொரு வருக்குச் சொல்ல, இப்படி வழி வழியாக காதால் கேட்டறிந்து சொல்லப்படும் கதைகளுக்குக் கர்ண பரம்பரைக் கதைகள் என்று பெயர்.

மகாபாரதத்தைத் தமிழில் எழுதியவர் யார்? வில்லிபுத்தூரார். வடமொழியில் எழுதியவர் யார்? வியாசமுனிவர்.

இந்த வியாசமுனிவர் தாம் பாடப்போகும் "பாரதம்" என்னும் பெருங்காப்பியத்தை எழுத சிறந்த ஒரு பெரிய ஞான பண்டிதன் கிடைக்க வேண்டும் என்று எண்ணினார். அதற்காக அம் முனிவர் விநாயகப் பெருமானை மனதிலே நினைத்துத் துதி செய்தார்.

அப்பொழுது விநாயகப் பெருமான் அவர் முன் எழுந்தருளினார்.

இறைவன், பக்தனின் அன்பிற்குக் கட்டுப் பட்டவர் அல்லவா? அதனால்தான் நினைத்தபொழுது நேரில் வந்து காட்சி தருகிருர்.

இவ்வாறு விநாயகர் தம் முன்னே மலர்ந்த முகத்துடன் தோன்றி, "பக்தா! உன் பக்திக்கு மெச்

சினேன்..உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

உடனே முனிவர் சிரமீது கரம் உயர்த்தி விநாயகரை வணங்கி, நெற்றியில் குட்டிக்கொண்டு, தோப்புக்கரணம் போட்டார்.

"சுவாமி! அடியேன் பாடப் போகும் பாரதப் பெருங்காவியத்தைத் தாங்கள்தான் எழுதித் தர வேண்டும். தங்களை விட்டால் எனக்கு வேறு எவரும் கிடைக்கமாட்டார்கள். தங்களுக்குத்தான் இந்த கஷ்டமான காரியத்தைச் சுலபமாகச் செய்யத் தக்க அபார சக்தி உண்டு" என்று சாமார்த்தியமாக பேசினார் முனிவர்.

முனிவரின் சாமார்த்தியம் விநாயகருக்குப் புரிந்து விட்டது. விநாயகர் நிலைமை மிகவும் தர்ம சங்கடமானது. இவரிடமிருந்து எப்படி தப்பிப்பது என்று யோசித்தார். பிறகு, அவரைப் பார்த்து "நீங்கள் கேட்டதால என்னால் தட்டிக் கழிக்க முடிய வில்லை. அதனால் நமக்குள் ஒரு சிறு நிபந்தனை விதித்துக் கொள்ள வேண்டும்" என்று திருவாய் மலர்ந்தார்.

"நிபந்தனை எதுவானாலும் நான் கண்டிப்பாக கட்டுப்படுகிறேன்."

"நீங்கள் ஒவ்வொரு சுலோகமாக யோசித்து யோசித்துச் சொல்வீர்கள். என்னால் பொறுமையாக உட்கார்ந்து எழுதமுடியாது. அதனால் நான் எழுத எழுத நீர் நிறுத்தாமல் தொடர்ந்து சுலோகங்களைச் சொல்லிக்கொண்டே போகவேண்டும்" என்று ஒரு நிபந்தனையை விதித்தார் தும்பிக்கைப் பெருமாள்.

இப்பொழுது வியாசமுனிவர், தர்ம சங்கடமான நிலைக்கு வந்தார். பிள்ளையாரின் நிபந்தனையிலிருந்து எப்படி தப்பிப்பது என்று சற்று நேரம் யோசித்தார் சட்டென்று முனிவர் ஒரு முடிவிற்கு வந்தார். அவர் பிள்ளையாருக்கு ஒரு நிபந்தனை விதித்தார்.

'சுவாமி! உங்கள் நிபந்தனைக்கு நான் கட்டுப் படுகிறேன். அதேபோல் தாங்களும் என்னுடைய நிபந்தனைக்குக் கட்டுப்பட வேண்டும்."

"அதனுலென்ன! கட்டுப்பட்டால் போகிறது உம்முடைய நிபந்தனையைச் சொல்லும்."

"நான் சொல்லும் சுலோகத்தின் பொருள் தெரிந்துதான் தேவரீர் எழுத வேண்டும்."

இவ்வாறு முனிவர் ஒரு நிபந்தனையை விதித்ததும் பிள்ளையாருக்கு அது பெரிதாகப் படவில்லை. "அப்படியே ஆகட்டும்" என்று தமது சம்மதத்தைத் தெரியப்படுத்தினுர்.

வியாசமுனிவர் சுலோகம் சொல்லத் தொடங்கினுர். விநாயகர் எழுதத் தொடங்கினுர். விநாயகர் எழுதும் வேகத்திற்கு, சுலோகங்களைச் சொல்ல முடியாமல் வியாசமுனிவர் தவித்தார். அதற்காக முனிவர் ஒரு நல்ல உபாயத்தைக் கையாண்டார்.

தமக்கு, சுலோகங்களைப் பற்றிச் சிந்திக்க அவகாசம் தேவைப்படும்போது முன்னுல் சொல்லிய சுலோகங்களை இருபொருள் படும்படியாகப் பாடி வைப்பார்.

அப்பொழுது விநாயகர் அந்த சுலோகத்தின் இரு பொருளையும் எண்ணிப்பார்த்து இந்த சுலோகத்திற்கு எந்த பொருள் பொருந்தும் என்று சிந்திக்கத் தொடங்குவார். அந்த சமயத்தில் முனிவர் மேற்கொண்டு சொல்வதற்குத் தம்மை தயார் செய்து கொள்வார்.

இவ்வாறு முனிவர் சுலோகங்களைச் சொல்லிக் கொண்டே வரும்போது எழுத்தாணி உடைந்து விட்டது. உடனே விநாயகர் தமது தந்தங்களில் ஒன்றை உடைத்து அதைக் கொண்டு எழுதலானுர் அதனுல்தான் பிள்ளையாருக்கு ஒரு தந்தம் உடைந்திருப்பதைப் பார்த்திருககிறோம். அந்த உடைந்த தந்தத்தைத்தான் தமது திருக்கரம் ஒன்றில் தாங்கிக் கொண்டிருக்கிறுர் விநாயகர்.

இவ்வாறு விநாயகர் அருளோடு வியாச முனிவர் மகாபாரதத்தை வெற்றிகரமாக எழுதி முடித்தார். விநாயகரும வியாச முனிவருக்குத் திருவருள் புரிந்து மறைந்தார்.

∴ ∴ ∴

ஒரு சமயம் பிள்ளையாரின் தாயான பார்வதி தேவியார் பிள்ளையாருக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்ற ஆசை கொண்டார்கள். தமது அன்புக் குமாரனை அழைத்து, ஆசையோடு கொஞ்சினுள். பிறகு, "பிள்ளையாரைப் பார்த்து, "மகனே! உனக்குத் திருமணம் செய்து வைத்துப் பார்க்க வேண்டும் என்று நானும் உன் தந்தையும் ஆசைப்படுகின்றோம். உனககு விருப்பமான பெண்கள் இருந்தால் சொல்வாயாக. மறுமுகூர்த்

தத்திலேயே உங்கள் இருவருக்கும் திருமணத்தை முடித்துவிடுகிறோம்." என்று தமது விருப்பத்தை விளம்பினார்கள்.

உடனே பிள்ளையார், "அம்மா! எனக்கு மனைவி யாக அமையக்கூடிய பெண் உங்களைப் போன்ற பேரழகு உடையவளாக இருக்க வேண்டும். சொல்ல போனால் உங்களைப்போலவே இருக்க வேண்டும்" என்று கூறினார்.

இது நடக்கக் கூடிய காரியமா என்ன? இருந்தாலும மகன் கேட்டு விட்டானே...என்ன செய்வது பிள்ளையாரைப் பார்த்து பார்வதிதேவி முகம் மலர, "மகனே! உன் விருப்பப்படியே திருமணம செய்து வைக்கிறேன. என்னைப்போன்ற சாயலுடைய பெண்ணை மூவுலகங்களிலும் சென்று தேடிக் கண்டுப்பிடித்து அழைத்துக்கொண்டு வா உடனே கல்யாணத்தை முடித்து விடுகிறேன்" என்றார்கள்.

அன்னையாரின் அமுத மொழி கேட்டு, மனம் மகிழ்ந்த பிள்ளையாரும் தாயைப்போன்ற பெண்ணைத் தேடி, சகல லோகங்களையும் சுற்றி சுற்றி வரலானார் கடைசியாக பூலோகத்திற்கு வந்து சேர்ந்தார்.

பூலோகத்தை வந்தடைந்த பிள்ளையார் குளக் கரையிலும், ஆற்றங்கரையிலும் ஒவ்வொரு வீதி யிலும், அரச மர நிழலிலும் சிறு கோயில்களிலும் அமர்ந்து தாயைப் போன்ற அழகான பெண் வருகிறாளா, என்று பார்க்கலானார்.

அதனால்தான் பூலோகத்தில் எங்கு பார்த் தாலும் பிள்ளையார் நிறைந்திருக்கிறார். என்ன இருந் தாலும் அவர் எங்கும் நிறைந்த பரம்பொருள் தானே

இவ்வாறு பிள்ளையார் மணப்பெண்ணைப் பார்த்து அமர்ந்திருக்க, நாம் அவரைப் பார்த்து வணங்கி நம் காரியத்தைச் சாதித்துக் கொள்கிறோம்.

∴ ∴ ∴

ஒரு முறை பிள்ளையாருக்கும், முருகனுக்கும் சரியான சண்டை. அவர்களும் நம்மைபோல் குழந்தைகள் தானே.

அவர்கள் இருவரும் அழுதுக் கொண்டே தந்தையாகிய பரமசிவனிடம் சென்று முறையிட்டனர்.

பிள்ளையார் தந்தையாரைப் பார்த்து, "அப்பா, முருகன் என் காதைக் கிள்ளினான்" என்றார். அதற்குப் பரமசிவன், "நான் அவனைக் கண்டிக்கிறேன்" என்றதும் முருகன் வேகமாக வந்து "அண்ணன் தான் என் கண்கள் ஒவ்வொன்றையும் எண்ணிப் பார்த்தான்" என்று அழுதுக்கொண்டே கூறினார்.

அழகு முருகனின் சுந்தர முகத்தில் கண்ணீர் பெருகியது. அது கண்டு பரமசிவன், சற்றுக் கடுமையாக, விநாயகா! உன் தம்பியிடம் நீ இப்படி வேடிக்கை செய்யலாமா?" என்று கேட்டார்.

அதற்கு விநாயகர் கண்களைக் கசக்கி கொண்டே! "அப்பா, இவன் என்ன செய்தான் தெரியுமா? என் துதிக்கையை முழம் போட்டு பார்க்கிறான்" என்று கூறினார்.

பரமசிவனுக்கு இவர்கள் இருவரையும் எப்படி சமாதானப்படுத்துவது என்றே புரியவில்லை, பரம

சிவனும் பார்வதியும் தங்கள் பிள்ளைகளின் குறும்புத் தனத்தை எண்ணி, ஒருவரையொருவர் பார்த்து சிரித்துக் கொண்டனர்.

பெற்றோர்கள் சிரிப்பதைப் பார்த்ததும் முருகனுக்கும் விநாயகருக்கும் சிரிப்பு வந்துவிட்டது. அவர்கள் இருவரும் சிரித்துக் கொண்டே முன் போல விளையாடச் சென்றனர்.

குழந்தைகளே! இப்படித்தானே நீங்களும் சண்டை போடுவீர்கள். உடனே சேர்ந்துக் கொள் வீர்கள். அதில் தானே இன்பம்!

இப்படியொரு கற்பனையான சம்பவத்தைப் பின்னணியாகக் கொண்ட அழகான பாடல் ஒன் றைச் சிவப்பிரகாச சுவாமிகள் நமக்குக் கூறுகிறார்

*அரனவன் இடத்திலே ஐங்கரன் வந்துதான்*
*''ஐய! என் செவியை மிகவும்*

*அறுமுகன் கிள்ளினன்'' என்றே சிணுங்கிடவும்*
*அத்தன் வேலவனை நோக்கி*

*விரைவுடன் வினவவே, அண்ணன் என் சென்னியின்*
*விளங்குகண் எண்ணினன் என*

*வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து நீ அப்படியும்*
*விகடம் ஏன் செய்தாய்? என*

*மருவும் என் கைந்நீளம் முழம் அளந்தான் என்ச*
*மயிலவன் நகைத்து நிற்க*

*மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கி நின்*
*மைந்தரைப் பாராய்! எனக்*

*கருது அரிய கடவ் ஆடை உலகு பல அண்டம்*
*கருப்பமாய்ப் பெற்ற கன்னி*

*கணபதியை அருகு அழைத்து அகமகிழ்வு கொண்டனள்*
*களிப்புடன் உமைக் காக்கவே!*

சிவப்பிரகாச சுவாமிகளுடைய இது போன்ற பாடல்கள் பலவற்றை நீங்கள் பாடப் புத்தகங்களில் படித்திருப்பீர்கள் அல்லவா!

வீரசைவ மரபிலே தோன்றிய சிவபிரகாச சுவாமிகள் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு சிறந்த புலவர். இவர் தமிழுக்கும் சைவத்திற்கும் சிறந்த பல தொண்டுகளைச் செய்து புகழ் பெற்றவர். இவர் நால்வர் நால் மணிமாலை என்னும் நூலால் சமயக்குரவர் நால்வர்களையும் சிறப்பித்து ஒரு நூல் இயற்றியுள்ளார்.

திருவேங்கைக் கோவை, திருவேங்கைக் கலம் பகம், திருவேங்கை உலா, பிரபுலிங்க லீலை, நன்னெறி, முதலிய முப்பத்திரண்டு நூல்களை இயற்றியுள்ளார். ஸ்ரீ காளத்தி புராணத்திலுள்ள கண்ணப்பர் சருக்கம, நக்கீரர் சருக்கம் என்பனவும் இவரால் இயற்றப்பட்டவைகளாகும்.

இத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க புலவர் பிள்ளையாரைப் பற்றி எத்தனை அழகாக வேடிக்கை யுடன் சொல்லியிருக்கிறார் பார்த்தீர்களா?

இவ்வாறு பிள்ளையாரைப் பற்றி எத்தனையோ கர்ணபரம்பரைக் கதைகளும் புலவர்களின் வேடிக் கைப் பாடல்களும் உண்டு. இருந்தாலும் விநாய கருக்கு என்று ஒரு பெரிய புராணம் உண்டு. அப் புராணத்தில் பெருமானுடைய வீரம், அன்பு, சக்தி, திருவிளையாடல்கள் முதலியவற்றை மிக அற்புத மாகவும் பக்தி சுவையோடும் சொல்லப்பட்டுள்ளன. அவற்றைப் பார்ப்போம்.

## 2. அருகம்புல்லின் அற்புத மகிமை

நமது தென்னுட்டில் பெருமை மிக்க பழமை யான கோயில்கள் பல உண்டு. அக்கோயில்கள் இரு வகைப்படும். ஒன்று வைஷ்ணவ மத அடிப் படையில் அமைந்துள்ள கோயில்கள். மற்றொன்று சைவமத அடிப்படையில் அமைந்துள்ள கோயில்கள்

விஷ்ணுவைச் சார்ந்தோர் வைஷ்ணவா சிவனைச் சார்ந்தோர் சைவர். இந்து மதத்திற்கு இவ்விரு மதங்களும் இரு கண்கள் போல அமைந்துள்ளன.

வைஷ்ணவக் கோயில்களில் மகாவிஷ்ணுவை பெருமாள் என்றும் மகாலக்ஷ்மியைத்தாயார் என்றும் கூறுவ . சைவக் கோயில்களின் சிவபெருமானை அப்பன் என்றும் பார்வதியை அம்மை என்றும் கூறுவர். அதனுல் அன்றோ அவர்கள் நமக்கு அம்மை அப்பனுகத் திகழ்கின்றார்கள.

மாணிக்கவாசக சுவாமிகள் கூட "அம்மையே! அப்பா! ஒப்பில்லா மணியே!" என்று உள்ளம் உருக பாடியுள்ளார்கள் அல்லவா!

ஒவ்வொரு கோயில்களிலும் கோயில் கொண்டுள்ள அந்தந்த கடவுள்களுக்குத் தகுந்தபடி பூஜைகள் நடைபெறும்.

வைஷ்ணவக் கோயில்களில் துளசி மிக முக்கியம். சைவக்கோயில்களை எடுத்துக் கொள்வீர்களானால் சிவனுக்கு வில்வம், கொன்றை என்றால் மிகவும் விருப்பமானதாகும். முருகனுக்கும் மற்றும் அம்மன் சாஸ்தா போன்ற கடவுள்களுக்கும் அரளி மலர்கள் விசேஷம். இப்படி ஒவ்வொருகடவுளுக்கும் விருப்பமான மலர்கள் உண்டு. விநாயகருக்குவிசேஷமான மலர் எது என்று தெரியுமா?

அருகம் புல்லும் வன்னி இலையும் எருக்கம் பூவும் தான்! விநாயகருக்கு ஆயிரம் ரோஜாப்பூ மாலைகள் போட்டாலும் அல்லது தங்கத்தாலும் வைரத்தாலும் மணிமாலைகள் அணிவித்தாலும், பட்டு, பீதாமபரங்களாலும் வாசமிகு வேறு பல மலர் மாலைகளாலும் வித விதமாக அணிவித்தாலும் விநாயகருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்காது. அவருக்கு விருப்பமானது அருகம் புல் ஒன்றேதான். அதற்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி விநாயக புராணத்தில் பல கதைகளில் வருகின்றன. இருந்தாலும் நான் உங்களுக்கு ஒன்றிரண்டு கதைகள் மட்டுமே கூறப் போகிறேன்.

ஒரு வனத்தில் அழகான ஆசிரமம் அமைத்துக் கொண்டு கவுண்டின்ய முனிவர் என்பவர் தமது மனைவி ஆசிரியை என்னும் நற்குண நங்கையுடன் அறம் வழுவாது வாழ்ந்து வந்தார்.

இவர் விநாயகப் பெருமானிடம் அளவற்ற பக்தி கொண்டவர். தினமும் வைகறைத் துயிலெழுந்து தூய நீராடி நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு விநாயகரின் திருநாமங்களையும், தோத்திரங்களையும் சொல்லிய வண்ணமாகவே இருப்பார்.

இவர் நீர் நிலங்கள் ஓரம் வளர்ந்திருக்கும் அருகமபுல்லை நிறைய எடுத்துக்கொண்டு வீட்டிற்கு வருவார். தாம் பூஜிதது வரும் விநாயகருக்கு அருகம் புல்லால் மாலைகள் தொடுத்து அணிவிபபார். அருகம புல்லால் விநாயகப் பெருமானின் கோடி நாமங்களை அர்ச்சனை செய்வார்.

ஒருநாள் இவரது மனைவி இவரிடம், "சுவாமி! வாசமிகு மலர்கள் பல இருக்க அருகம் புல்லால் ஆனை முகப் பெருமானை வழிபடுகிறீர்களே அதற்கு என்ன காரணம்? அருகமபுல் அத்தனை மகிமை மிக்கதா என்ன? இந்த ஐயத்தை உங்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் எனபது எனது நெடுநாளைய ஆசை" என்று பணிவன்போடு கேட்டாள்.

மனைவியார் மொழிந்தது கேட்டு மாமுனிவர் மோகனப் புன்னகை செய்தார். தமதுமனைவியார் மூலம் அருகம்புல்லின் பெருமையையும மகிமையை

யும் அகில உலகத்திற்கும் உணர்த்த எண்ணினர் முனிவர். அதற்காக ஓர் உபயம் செய்தார்.

முனிவர் பூஜை அறைக்குள் சென்றார். விநாயக பெருமானின் பாதகமலங்களில் தம்மால் அர்ச்சிக்கப் பட்டிருந்த அருகம் புல்லிலிருந்து ஒரு சிறு அருகம் புல்லை எடுத்துக் கொண்டார் நேராக மனைவியிடம் வந்தார் அதனை மனைவியாரிடம் கொடுத்தார்.

"இந்த அருகம்புல்லை எடுத்துக் கொண்டு நேராக தேவேந்திரனிடம் செல்வாயாக. நமது ஏழ்மை நிலையை எடுத்து இயம்பி, இதன் எடைக்குச் சமமான பொன் தருமாறு கேட்பாயாக" என்று முனிவர் மொழிந்தது கேட்டு மனைவியார், மறுமொழி பேசாது, அதனைப் பெற்றுக்கொண்டு அவரது ஆசி பெற்று, கணவனின் கட்டளையை நிறைவேற்ற இந்திரலோகத்திற்குப் புறப்பட்டாள்.

ஆசிரியை அமரலோகத்தை அடைந்தாள். அமரேந்திரனைச் சந்தித்தாள். அமரேந்திரன முனி பத்தினியை வணங்கி வரவேற்றான். உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்தான்.

பிறகு பயபக்தியுடன் தேவேந்திரன் அவர்களைப் பார்த்து, "தாயே! என்ன காரணம் பற்றி இங்கு வந்தீர்கள்,, என்று கேட்டான். அதற்கு ஆசிரியை "அமரேந்திரா! நான் கவுண்டின்ய முனிவரின் மனைவி. நாங்கள் பல காலமாகவே ஏழ்மை நிலை யிலேயே இருந்து வருகிறோம் அதற்காக என் கணவர் இந்த அரும்புல்லை என்னிடம் கொடுத்து இதன எடைக்குச் சமமான பொன்னைப் பெற்று

வருமாறு கட்டளையிட்டார்கள். எங்கள் குறையைத் தீர்த்து சுபிட்சத்தை அருளவேண்டும்!" என்று விண்ணப்பித்தாள்.

அம்மையார் மொழிந்தது கேட்டு அமரேந்திரன் அதிசயித்தான். அவனுக்கு நகைப்பு வந்தது. இந்த முனிவர் பிழைக்கத் தெரியாதவர் போலிருக்கிறதே-என்னிடம் கேவலம் அருகம்புல் எடைக்கா பவுன் கேட்பது, என்று எண்ணி அலட்சியமாக சிரித்தான்.

பின்னர் அமரேந்திரன் அகம்பாவத்துடன் அவர்களைப்பார்த்து,"தாயே! உங்களைக் குபேரனிடம் அழைத்துப் போகச் சொல்கிறேன். அருகம்புல் எடைக்கு மட்டுமல்ல, மேலும் உங்களுக்கு வேண்டிய அளவு பொன்னும பொருளும் அளிக்கச் சொல்கிறேன்" என்று கூறியவண்ணம் ஒரு தேவதூதனை அழைத்து "நீ இவர்களை அழைத்துக் கொண்டு குபேரனிடம் சென்று இவர்களுககு வேண்டிய மட்டும பொருளுதவி செய்யுமாறு நான் ஆணையிட்டதாகக் கூறு" என்று சொன்னான்.

அத் தேவ தூதனும் அமரேந்திரனை வணங்கி அம்மையாரை அழைததுக் கொண்டு குபேரனின் இருப்பிடமான அழகாபுரி பட்டணத்திற்குச் சென்றான். குபேரனைக் கண்டான். அம்மையாரைப் பறறி குபேரனிடம் எடுத்துக் கூறி அமரேந்திரனின் ஆணையைப் பற்றி அறிவித்தான்.

குபேரன் மனமகிழ்ச்சி கொண்டான். முனிவர்க்கு உதவுகின்ற பெருமபேறு தமக்குக்கிட்டியதே

என்று களிப்பெய்தினான். அக்கணமே ஏவலாளர் மூலம் அம்மையாரின் முன்னால் பொன்னை மலைபோல குவிக்கச் செய்தான்.

"தாயே! அருகம்புல்லின் எடைக்கு எவ்வளவு பொன் வந்துவிடப் போகிறது. அதனால் உங்களுக்குத் தேவையான அளவு பொன்னை எடுத்துக் கொள்ளுங்கள்" என்று பணிவோடு விண்ணப்பித்தான் குபேரன்.

"உங்கள் பரந்த உள்ளத்திற்கு என் நன்றி. என் கணவரின் கட்டளை இந்த அருகம்புல்லின் எடைக்குச் சமமான பொன் மட்டும்தான் வாங்கி வரவேண்டும் என்பது. அதனால் தாங்கள் தயவு செய்து எங்கள் விருப்பப்படி இந்த அருகம்புல் எடைக்குச் சமமான பொன்னை மட்டும் கொடுத்தால் போதுமானது".

இவ்வண்ணம் முனிவரின் மனைவி சொன்னதும் குபேரன் மறுமொழி பேசவில்லை.

அக்கணமே குபேரன் துலாக் கோலைக் கொண்டு வருமாறு கட்டளையிட்டான், துலாக் கோலும் வந்தது. துலாக்கோலைக் கட்டிவிட்டு; "தாயே! அருகம்புல்லை ஒரு தட்டில் வையுங்கள்" என்று கேட்டுக் கொண்டான்.

முனிவரின் மனைவியார், கணேசப் பெருமானை மனத்திலே தியானித்துக் கொண்டாள். தான் கொண்டு வந்திருந்த அச் சிறு அருகம்புல்லை ஒரு தட்டில் வைத்தாள். தட்டு உடனே தாழ்ந்தது.

அதைப் பார்த்ததும் அனைவர்க்கும் சற்று வியப்பு மேலிட்டது.

குபேரனின் ஏவலாள் சிறிது தங்கத்தை எடுத்து மறு தட்டில் வைத்தான். தட்டு சமமாகவில்லை. மேலும் சிறிது தங்கததை வைத்தான். அப்பொழுதும் சமமாகவில்லை. தங்கத்தை முடிந்த மட்டும் வைத்தான். அப்பொழுதும் தட்டு சமமாகவில்லை.

குபேரன் கதி கலங்கிப் போனான். இவ்வற்புதக் காட்சியைக் கண்ட அனைவரும அதிசயித்து நின்றனர். முனிபத்தினி கொண்டு வந்த அருகம்புல்லின் மகிமையைப் பற்றி எண்ணத் தொடங்கினர்.

"இவ்வருகம்புல் சாதாரணமானதல்ல. சொல்ல முடியாத அளவிற்குத் தெய்வீக சக்தி பெற்றது. இதற்குப பொனனும், மணியும் ஈடாகாது, இணையாகாது என்பதை உணர்ந்துதான் தேவேந்திரன் இந்த மாதரசியை நம்மிடம அனுப்பி வைததிருப்பானோ? எதற்கும் நமது களஞ்சியத்திலுள்ள அத்தனை நகைகளையும் கொண்டு வந்து குவிததால் என்ன?" என்றெல்லாம் பலவாறு எண்ணி எண்ணி மனம் குழம்பிய குபேரன் முடிவாகத் தனது களஞ்சியத்திலுள்ள அததனை பொக்கிஷங்களையும் கொண்டு வந்து இறக்குமாறு ஆணையிட்டான்.

துலாக்கோலில் பொன்னும் மணியும் வைடூரியமும் மலை மலையாக ஏற்றப்பட்டும நிறைமட்டும் சற்றும் சரியாகவில்லை. அருகம்புல இருந்த தட்டு மட்டும் தாழ்ந்துதான் இருந்தது.

களஞ்சியம் காலியானதும் குபேரன் கவலைக்குள்ளானான். மேற்கொண்டு என்ன செய்வது என்று தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கினான்.

அருகம்புல்லின் சக்தியால் அகிலம் போற்றும் விநாயகப் பெருமானே தராசின் தட்டில் எழுந்தருளியுள்ளார் என்பதனை உணர்ந்து பாரக்க சகதியற்ற குபேரன், தன்னையும் தமது மனைவியையும் அருகம புல்லுக்கு அர்ப்பணமாக்க எண்ணினான்.

குபேரன் மனைவியை அழைத்து வந்தான். இருவரும் சேர்ந்து கொணடு தராசு தட்டில அமர்ந்தனா. அப்பொழுதும் எடை சரியாகவில்லை.

இவற்றை எல்லாம் கேள்வியுற்ற அமரேந்திரன் அக்கணமே தமது வாகனமாகிய ஐராவதத்தின் மீது அமர்ந்து அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தான். குபேரன் நடந்தவற்றை விளக்கினான்.

அமரேந்திரன் சற்று நேரம் அதிசயத்தால் சிலை போல் அசைவற்று நின்றான். பின்னர் அமரேந்திரன் தன்னுடைய தேவ வீரர்கள் மூலம் சங்கநிதி பதுமநிதி போன்ற பற்பல நிதிகளைக் கொண்டுவரச் செய்தான். அவற்றைத் துலாத்தட்டில் வைத்துப் பார்த்தான். அப்படியும் துலாத்தட்டுக்கள் சரியாகவில்லை.

அமரேந்திரன் ஒன்றும் புரியாமல் மனம் குழம்பினான். சற்று நேரம் சிந்தித்தான். பின்னர் சட்டென்று ஒரு முடிவிற்கு வந்தான். அமரேந்திரனே துலாத்தட்டில் ஏறி அமர்ந்தான். அப்படியும் தட்டு சமமாகவில்லை.



பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளை யும் அமரேந்திரன் மனதிலே தியானித்தான். மும் மூர்த்திகளும் அமரேந்திரனின் பக்திக்குக் கட்டுப் பட்டு, அவன் முன் எழுந்தருளினர்.

அமரேந்திரன் மும்மூர்த்திகளிடமும் நடந்த விருத்தாந்தங்கள் அனைத்தையும் விவரமாக எடுத்துக் கூறினன்.

அமரேந்திரனின் மொழி கேட்டு மும்மூர்த்தி களின் முகத்திலும் புன்னகை மலர்ந்தது.

அருகம்புல்லின் மகிமையும், விநாயகப் பெருமானுக்கு அருகம்புல் எவ்வளவு பிரியமானது என்பதும் அம்மூர்த்திகளுக்குத் தெரிந்தபோதும் அதன் மகிமையை மூவுலகிற்கும் உணர்த்த வேண் டும் என்று திருவுள்ளத்திலே கொண்டு, மும்மூர்த்தி களும் தட்டிலே ஏறி அமர்ந்தனர். அப்பொழுதும் தட்டு சமமாகவில்லை.

இக் கண் கொள்ளாக் காட்சியைப் பாாத்து தேவாகளும், கந்தர்வர்களும், தேவ மகளிரும். மற்றும் ஈரேழு லோகத்தவரும் வியந்தனர்.

முப்மூர்த்திகள் தேவேந்திரனைப் பார்த்து" "தேவேந்திரா! விநாயகப் பெருமானின் திருவடித் தாமரைகளில் அருச்சிக்கப்படும் அருகம்புல்லுக்கு ஈடு இணையாக எதுவுமே கிடையாது. இந்த உண் மையை அகில சராசரங்களுக்கும் உணர்த்த வேண் டும் என்பதற்காகத்தான் கவுண்டின்ய முனிவர் இப்படியொரு சம்பவத்தை உருவாக்கியுள்ளார்-

அம் முனிவர் விநாயகப் பெருமானிடம அளவற்ற பக்தியும், பிரேமையும் கொண்டவர். அவர் எந்த நேரமும் அருகம்புல்லால் விநாயகரைப் பூஜித்துப் பெருமை கொள்ளும் தவசிரேஷ்டர். நாம் அனைவரும் அவரது ஆசிரமத்திற்குச் சென்று வருவோம்" என்று திருவாய் மலர்ந்தனர்.

உடனே, மகாவிஷ்ணு கருட வாகனத்திலும் பிரம்ம தேவன் அன்ன வாகனத்திலும், பரமசிவன் ரிஷபவாகனத்திலும், அமரேந்திரன் ஐராவதத்திலும் அமர்ந்து முனிவரது ஆசிரமத்திற்கு புறப்பட்டனர்

முனிவரது மனைவி ஆசிரியை, அமரேந்திரன் ஆணைப்படி புஷ்ப வாகனத்தில் அழைத்து வரப் பட்டாள்.

கவுண்டின்ய முனிவர் தமது ஆசிரமத்தில், விநாயகப் பெருமானைத் தியானித்தவாறு நிஷ்டை யில் அமர்ந்திருந்தார்.

மும்மூர்த்திகளும், தேவர்களும், முனிவர்களும் புடைசூழ முனிவரது ஆசிரமத்திற்கு முன்னால் எழுந்தருளினர்.

மாமுனிவர் நிஷ்டை கலைந்து எழுந்தார். மும் மூர்த்திகளையும் தோத்திரம் செய்து வணங்கினார் பன்முறை நிலத்தில் விழுந்து வணங்கி எழுந்து சிரமீது கரங்கூப்பி நின்றார். மெய்யுருகினார். பக்தி பரவசத்தில் ஆனந்தக் கூத்தாடினார். பாடினார். பரவசம் கொண்டார்.

முனிவரது மனைவியார் விரைந்து வந்து, கணவரது பாதங்களைத் தொழுது, தேவலோகத்தில் நடந்த அதிசயத்தை விவரமாகக் கூறினர்.

எம்பெருமான் முனிவரைப் பார்த்து, "தவ சிரேஷ்டர்களே! உங்கள் பக்திக்கு நாங்கள் உளம் கனிந்தோம். அருகம்புல்லின் பெருமையை அகில உலகிற்கும் உணர்த்தச் செய்த நீரே புண்ணிய புருஷர். அருகம்புல்லினுல் ஆனைமுகப் பெருமானை அனுதினமும் வழிபட்டு வரும் உங்களுக்குச் சகல சௌபாக்கியங்களும் பெருகட்டும். நீங்கள் இருவரும் பூ மண்டலத்தில் பல காலம் வாழ்ந்து, பேரின்ப வீட்டை அடைவீர்களாகுக." என்று திருவாய் மலர்ந்து அருளினர்.

மும்மூர்த்திகளும் முனிவர்க்குத்திருவருள் புரிந்து மறைந்தனர். அமரேந்திரன் முனிவருக்கு அருள் செய்து, குபேரனுடனும் மற்ற தேவர்களுடனும் தேவலோகத்திற்குச் சென்ருன்.

அருகம்புல்லின் பெருமையை உணர்ந்த ஆசிரியை, கண்களில் நீர் மல்க, கணவனின் கால்களில் விழுந்து வணங்கி, "சுவாமி, என பிழையைப் பொறுத்தருளுங்கள்" என்று கேட்டுக்கொண்டான். கவுண்டின்ய முனிவர் மனைவியாருக்கு மங்கல வாழ்த்துக்கள் கூறினர்.

இவ்வாறு அருகம்புல்லின் மகிமையால் மும் மூர்த்திகளைக் கண்டு மகிழ்ந்த கவுண்டின்ய முனிவரின் பக்தியைத் தான் என்னென்பது!

மாமுனிவரும் அவரது மனைவியாரும் அருகம் புல்லினால் வழக்கம்போல் விநாயகப் பெருமானைப் பூஜித்து, பூலோகத்தில் சகல மேன்மைகளையும் பெற்றனர்.

பிள்ளைகளே ! இனிமேல் நீங்களும் பிள்ளை யாருக்கு அருகம்புல் மாலையை அணிவித்து நல்ல மேன்மையோடும், பக்தியோடும், புத்திசாலித்தனத் தோடும் வாழ்ந்து பட்டம் பல பெற்று என்றும நல்ல பிள்ளைகளாக வளர்வீர்களாகுக.

## 3. விநாயகப் பெருமானே வாழி!

பாரதத்தில் பாய்ந்து ஓடும் நதிகள் அனைத்தும் நமக்குப் புண்ணிய தீர்த்தங்களாகத் திகழ்கின்றன.

சிந்து, கங்கை. யமுனை, சரஸ்வதி, நர்மதா கோதாவரி, கிருஷ்ணு, காவேரி போன்ற நதிகள் நமக்கு நல்ல வளத்தையும், செல்வத்தையும், சுபிட்சத்தையும் கொடுக்கின்றன.

இப்படிப்பட்ட ஒவ்வொரு நதிகளின் மகிமைகளையும் விளக்குவதற்கு ஒவ்வொரு நதிக்கும் தனித்தனியே புராணங்கள் உண்டு. அப்புராணங்களில் இந்நதிகளின் தெய்வத் தன்மையைப் பற்றி நன்கு விளக்கப்பட்டுள்ளன. காவேரி நதியின் சிறப்பைச் சொல்லும் புராணத்தில் நாம் விநாயகப் பெருமானின் திருவிளையாட்டைக் காணலாம்.

பொதிகை மலை உச்சியிலே மும்மூர்த்திகளின் அருளோடு விநாயகப் பெருமானின் அற்புத விளை

யாட்டால் அகத்திய முனிவரிடமிருந்து பிறந்த காவேரி கிழக்கு முகமாக ஓடி, சோழ மண்டலக் கரையில் காவிரிப்பூம் பட்டணத்தருகே சங்கமம் ஆகிறது.

காக—விரி என்பதுதான் காவிரி என்ருயிற்று.

"கா" என்னும் எழுத்து பாவத்தைப் போக்கும். "வ" என்னும் எழுத்து விரும்பியதை அளிக்கும். "ரி", என்னும எழுத்து மோக்ஷத்தைக் கொடுக்கும் என்று புராணங்கள் கூறுகின்றன.

இப்படி காவேரீ நதியின் பெருமைகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம். ஆனல் பிள்ளைகளாகிய உங்களுக்கு, பிள்ளையாருக்கும் காவேரிக்கும் என்ன சம்பந்தம் என்பதனைத் தெரிந்துக் கொள்ளத் தானே ஆவல் அதிகம்!

முன்ெனுரு காலத்தில் சூரபன்மன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். இவன் அசுர குலத்தைச் சேர்ந்தவன். இவன் பெரிய பல தவங்களைச் செய்து சிவபெருமானிடமிருந்து அரிய பல வரங்களைப் பெற்றவன்.

வரம் பெற்ற இம்மன்னன் வரம்பற்ற முறையில் நடக்கலானன். தேவர்களையும் மற்றும் பல தேசத்து மன்னர்களையும் வென்று வாகை சூடியதோடு நில்லாமல், அவர்களைப் பல வழிகளில் துன்புறுத்தவும் தொடங்கினன்.

இவனது இன்னல்களுக்குப் பயந்து கொண்டு தேவர்களும் அரசர்களும் அங்குமிங்குமாக ஓடி ஒளிந்தனர்.

அவ்வாறு ஓடி ஒளிந்தவர்களுள் தேவர்களின் அரசனான தேவேந்திரனும் ஒருவன்!

இவன் சூரபன்மனின் கொடுமைகளுக்குப் பயந்து கொண்டு, தனது மனைவி இந்திராணியுடன் தேவலோகத்தை விட்டு, பூலோகத்திற்கு வந்தான். பூலோகத்தில் சீர்காழி என்னும் புண்ணிய ஊரில், எவரும் அறியாத வண்ணம் அழகிய சோலை நடுவே ஆசிரமம் ஒன்றை அமைத்துக் கொண்டு வாழத் தொடங்கினான்.

சீர்காழி என்று சொன்னதும் உங்களுக்குத் திருஞான சம்பந்தர் ஞாபகம் வந்து விட்டதல்லவா!

தேவாரம் என்னும் தெய்வத் திருப் பாடல்களை அளித்த சிவநேசச் செல்வர் மூவருள் திருஞான சம்பந்தரும் ஒருவர்! இவர் பிறந்த ஊர் தான் சீர்காழி. இவர் பிறந்து வளர்ந்த வீடு இன்னும் சீர்காழியிலே உள்ளது. இங்கு கோயில் கொண்டுள்ள இறைவனுக்குத் தோணியப்பர் என்று பெயர்.

ஒரு முறை திருஞான சம்பந்தர் கோயில் குளத்தருகே தந்தையாரைக் காணாது அழுதபோது தோணியப்பர் உமாதேவியுடன் அவர் முன்னால் தோன்றினார். இறைவனின் அவ்விருப்பப்படி அம்மையார் பொற்கிண்ணத்தில் சிவஞானத் தெய்ப்பாலுடன் கலந்து ஊட்டி சம்பந்தரைத் திருஞான சம்பந்தராக நமக்குத் தந்தருளினார்கள்.

இவ்வாறு பெருமையும் புகழும் பெற்ற சீர்காழியின் அருள் வடிவான தோணியப்பரைப போற்றிப் பணிந்து தேவேந்திரனும் இந்திராணியும் வாழ்ந்து வந்தனர். தினமும் பூசிப்பதற்குத் தேவையான மலர் பெறுவதற்காக ஒரு மலர் வனமே அமைத்தான் அமரேந்திரன்.

இவ்வாறு அமரேந்திரன் சீர்காழியிலே தங்கியிருந்து தோணியப்பரைப் பூஜித்து வருவதைக் கேள்வியுற்ற சூரபத்மன், அவனது பூசைக்குப் பல இடையூறுகளைக் கொடுத்தான்.

தேவேந்திரனின் மலர்வனத்தை அழிக்க வேண்டும் என்பதற்காக, சூரபத்மன் மேகங்களுக்கு ஆணையிட்டு, மலர்வனத்தில் மழை பெய்யாது இருக்கச் சொன்னான். மேகங்களும் அவனது ஆணைக்குக் கட்டுப்பட்டன. இதனால் மழையின்றி மலர்ச் சோலையிலுள்ள மலர்கள் வாடி வறண்டன. இந்திரன் மனம் வாடினான். பரமனின் பாதமலர் பணிய மலர் கிடைக்கவில்லையே என்று நாளெல்லாம் நெஞ்சம் கலங்கி கண்ணீர் உகுத்தான். அதுசமயம் விண் வழியே ஓர் அசரீரி பிறந்து.

"அமரேந்திரா! அஞ்சாதே! இம் மலரச் சோலை முன்போல் செழித்து, வாசமித மலர்களைக் கொழித்து வளர, என்றும் வற்றாத நதியொன்று இம்மலர் வனத்துள் பாய்ந்து பெருகும். அதனால் அச்சத்தை அகற்று. ஆனந்தப் பெருக்குடன் ஆண்டவனுக்குச் செய்து வரும அரும்பணியைத் தொடர்ந்து செய்து வருவாயாக!"

இறைவனின் அருள்வாக்கு விண் வழியே தனக்கு அருளியது கேட்டு அகமலர்ந்த அமரர் கோன் ஆனந்தப் பரவசம் பூண்டான், அந்த நல்ல திருவாசகத்தை மனைவி இந்திராணியிடம் கூறினன்.

இருவரும் திருத்தோணியப்பரின் கருணையை போற்றித் துதி செய்தனர். அவர்கள் முன்போல் தங்கள் வழிபாட்டைத் தொடர்ந்து செய்து கொண்டே வந்தனர்.

நாட்கள் பல சென்றன. அசரீரி கூற்றுபோல் அழகிய நதி தனது மலர் வனத்திற்குப் பாய்ந்து வரும் நாளை தேவேந்திரன எதிர் பார்த்துக் கொண்டிருந் தான். நாட்கள் நகர நகர அமரேந்திரனுக்கு பெருத்த ஏமாற்றம தான் ஏற்பட்டது.

இத்தருணததில் நாரத முனிவர், மகரயாழில் தேவகானததை இசைத்தவாறு அமரேநதிரனின் மலர்ச்சோலைக்கு வந்தார்.

அமரேந்திரனைக் கண்டார். இந்திரனும் இந்திராணியும முனிவரை வணங்கி வரவேற்று உயர்ந்த ஆசனததில் அமரச் செய்து பூஜித்தார்கள் பிறகு அமரேந்திரன் முனிவரிடம நடந்த விருத் தாந்தங்கள் அனைததையும் ஒன்றுவிடாமல் எடுத்துக் கூறி அசரீரியால் இறைவன் தனக்கு அருளியதை யும் கூறினன். பின்னர் அமேரந்திரன் நாரதரிடம, "சுவாமி! மலர் வனத்துள் நதி பாய்ந்து வரும் என்பது எப்படி சாத்தியமாகும?" என்று கேட்டான்.

அது கேட்டு நாரதர், "தேவேந்திரா! அசரீரி யின் பொருளை உனக்குப் புரிய வைக்கிறேன்" திருக்

கயிலாய மலையிலிருந்து பெருகி வந்த காவேரியை எம்பெருமானின் அருளால், அகத்தியர் தமது தபோ வலிமையால் கமண்டலத்துள் அடக்கிக் கொண்டு விட்டார். அதனால்தான் நதியின் பிரவாஹம் இவ்விடத்திற்கு வராமல் தடைப்பட்டு விட்டது. அதைப் பெருகச் செய்ய வேண்டும். தற்போது அகத்தியர் சையவரைச் சாரலில் தவம் செய்து கொண்டிருக்கிறார். அவரிடமுள்ள கமண்டலத்தைக் கவிழ்த்தால் காவேரி வெளியே பொங்கி வரும்", என்று பகர்ந்தார்.

"சுவாமி! அருந்தவசியான அகத்தியரின் கரங்களிலுள்ள கமண்டலத்தைக் கவிழ்த்துக் காவேரியைப் பெருக வைப்பது இயலக் கூடிய காரியமா என்ன?"

"அதற்கும் ஓர் உபாயம் கூறுகிறேன். முழு முதற் பரம்பொருளான விநாயகப் பெருமானின் திருவருள் இருந்தால் இக் காரியம் எளிதில் சாத்தியமாகும்' அதனால் நீ விநாயகப் பெருமானை நினைத்து தவம் செய்வாயாக!"

இவ்வாறு நாரதர் நவின்றது கேட்டு இந்திரன் மகிழ்ச்சி கொண்டான். பின்னர் நாரத முனிவர், இருவருக்கும் திருவருள் புரிந்து சென்றார்.

நாரதரின் உபதேசப்படி தேவேந்திரன் கணேச பூஜையைத் தொடங்கினான். முப்போதும் இன்றி எப்போதும் விநாயகரின் திருவடித் தாமரைகளைச் சிந்தையிலே கொண்டு தவநெறியில் வாழ்ந்து வந்தான்.

அமரேந்திரனின் பூஜைக்கும், பக்திக்கும், மனம் கனிந்த விநாயகப் பெருமான், அமரேந்திரன் முன் தோன்றினர். அமரேந்திரன், விநாயகரை வலம் வந்து வணங்கி நின்றான்.

"பெருமானே! தேவரீர் உள்ளங்கனிந்து அகத்தியர், கமண்டலத்திற்குள் அடக்கி வைத்துள்ள காவிரி நீரைக் கவிழ்த்து, இச்சோலைக்குள் பாய்ந்து பெருகிடச் செய்தல் வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

"அமரேந்திரா! அச்சத்தை அகற்றுக. உனது எண்ணத்தை ஈடேற்றுவோம்"; என்று அமரேந்திரனுக்குத் திருவருள் புரிந்த விநாயகப் பெருமான், அன்புத் தொண்டனின் விண்ணப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு சையவரைச் சாரலுக்குப் புறப்பட்டார்.

அம்மலைச் சாரலில் அகத்திய முனிவர் கண்ணை மூடிக்கொண்டு மோன தவத்தில் அமர்ந்திருந்தார்.

உடனே விநாயகப் பெருமான் காகத்தின் வடிவத்தைத் தாங்கிக் கொண்டார், பறந்து சென்று, அகத்தியரின் பக்கத்திலிருந்த கமண்டலத்தில் மீது அமர்ந்தார். விநாயகரின் சக்தியால் அகத்தியர் நிஷ்டை கலைந்தார். கமண்டலத்தின் மீது காகம் அமர்ந்திருப்பது கண்டு காகத்தை விரட்டினர்

காகமாக வந்த விநாயகப் பெருமான் கமண்டலத்தை நீரோடு கவிழ்த்து விட்டு மறைந்தார். கமண்டல நீர் காவிரி ஆருகப் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கியது. அக்கணமே விநாயகப் பெருமான் ஓர் அந்தணச் சிறுவன் வேடம் பூண்டு அகத்தியர் முன் தோன்றினர்.

அகத்தியருக்கு அந்தணச் சிறுவனைப் பார்த்ததும் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. யாரோ ஒரு அசுரன்தான் காகமாகவும் அந்தணச் சிறுவனாகவும் வந்து தன் முன்னே மாயைகள் புரிகின்றான் என்று எண்ணினார். அந்தணச் சிறுவனைக் கோபக் கண்களுடன் பார்த்தார். அந்தணச் சிறுவன் அகத்தியரைப் பார்த்து நகைத்தான்.

அகத்தியருக்கு ஆத்திரம் பொங்கி எழுந்தது. அந்தணச் சிறுவன் தலையில் குட்டுவதற்காக கையை ஓங்கினார். அந்தணச் சிறுவன் ஓடத் தொடங்கினான். குறு முனிவர் அகத்தியரும் அந்தணச் சிறுவனைத் துரத்தத் தொடங்கினார்.

காற்றினும் கடுக அந்தணச் சிறுவன் ஓடினான். அகத்தியரோ ஓடி ஓடி களைத்துப் போனார். மேற் கொண்டு ஓட முடியாமல் துவண்ட செடிபோல் வாடி நின்றார்.

அப்பொழுது எங்கும் பேரொளி பிரகாசித்தது. அமரர்கள் பூ மழை பொழிந்தனர். அந்தணச் சிறுவன் விநாயகப் பெருமானாக எழுந்தருளி அகத்தியருக்கு ஆனந்தக் காட்சி கொடுத்தார்.

விநாயகப் பெருமானின் ரூபங் கொண்டு அகத்திய முனிவர் அஞ்சினார், நெஞ்சு உருகினார், கண்ணீர் உகுத்தார்; அவர் உடல் நடுங்கியது. பகவானுக்குப் பெரும் பாதகம் புரிந்து விட்டதாக எண்ணித் துடித்தார். "பிழை பொறுத்தருள வேண்டும்" என்று விநாயகப் பெருமானிடம் பிரார்த்தனை புரிந்தார்.

சோகங்தால் துவண்டார். பக்தியோடு சுற்றிவலம் வந்தார். சுந்தர நாமத்தால் தோத்திரம் செய்தார். பெருமானைக் குட்டுவதற்காக ஓங்கிய கரத்தால் தமது தலையிலே ரத்தம் பெருகும் வண்ணம் பல தடவை பலமாகக் குட்டிக் கெகண்டார். விநாயகப் பெருமான் அவரைத் தடுத்து ஆட்கொண்டருளினர்.

அகத்தியர் மனம் மகிழ்ந்து, ''விநாயகப் பெருமானே! அடியேன் அறியாது செய்த பிழையைப் பொருத்தருளுவீர். அடியேன் சிவபெருமானின் கட்டளைப்படி பொதிகை மலைச்சாரலுக்குச் சென்று கொண்டிருக்கிறேன். பொதிகை மலையில், ஈசனுருக்கு திருமஞ்சனத்திற்கு உகந்த கமண்டலத்தில் உள்ள நீரை சற்றுகூட மிஞ்சாது கவிழ்த்துவிட்டீர்களே!'' என்று பணிவன்போடு பகர்ந்தார்.

விநாயகப் பெருமான் அமரேந்திரனைப் பற்றிய அத்தனை விருத்தாந்தங்களையும் எடுத்துக் கூறி பெருகி ஓடும் காவிரி நீரைத் தமது திருக்கரத்தால் அள்ளி எடுத்து முன்போல் கமண்டலத்தில் நிறைத்தார். அகத்தியர் அகமகிழ்ந்து அழகு தமிழால், விநாயகரைப் போற்றிப் பணிந்து பாடினர்.

அகத்தியரின் கொஞ்சு தமிழால் நெஞ்சு குளிர்ந்த விநாயகப் பெருமான் அகத்தியர்க்கு பற்பல அரிய வரங்களைக் கொடுத்தருளினர்.

ஆனைமுகப் பெருமானின் அருளைப் பெற்ற அகத்தியர் பொதிகை மலைக்குச் சென்றார். தவத்தைத் தொடங்கினர்.

அகத்தியரின் கமண்டலத்திலிருந்து பிரவாகத் தோடு , புறப்பட்ட காவேரி, அமரேந்திரனின் மலர் வனத்தில் ஆனந்தமாகப் பாய்ந்து ஓடத் தொடங்கியது! அமரேந்திரன் முன்போல் பூஜை யைத் தொடர்ந்து நடத்தினுன். எம்பெருமானின் திருவருளால் முருகப் பெருமான் சூரபத்மனை சம் ஹாரம் செய்து அமர பதவியை அவனுக்குக் கொடுத் தார்.

*மருங்கு வண்டு சிறந்தார்ப்ப*
*மணிப்பூ வாடை யது போர்த்திக்*
*கருங் கடற்கண் விழி தொல்கி*
*நடந்தாய் வாழி காவேரி*

*பூவார்சோலை மயிலாலப்*
*புரிந்துகுயில்க ளிசைபாடக்*
*காமர் மாலை வருகசைய*
*நடந்தாய் வாழி காவேரி*

*வாழி எந்தன் வளநாடு*
*மகவாய் வளர்க்குந் தாயாகி*
*ஊழி யுய்க்கும் பேருதவி*
*மொழிவாய் வாழி கவேரி*

சிலப்பதிகாரத்தில் இளங்கோ அடிகள் காவேரியை இவ்வண்ணம் ஏத்திப் பாடுகிருர்.

“காவேரி வாழி” என்று இளங்கோவடிகள் காவேரியை வாழ்ததிப் பாடினுர். நாமோ அந்தக் காவேரியை பெருகவிட்டு, சுபிடசத்தைத் தந்தருளிய “விநாயகப் பெருமானே வாழி” என்று நாமும் வாழ்த்தி வணங்குவோம்.

தும்பிக்கையான பாதம் பணிவோர்க்குத் துன் பம் ஏது? துயரம் ஏது? இன்பம் அன்ருே என்றும் அவர்களை வந்து சாரும்!

# 4. இராவணனுக்கு அருளிய விநாயகர்

இராவணனை உங்களுக்கெல்லாம் நன்ருகத் தெரியும். இராவணன் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே, இவன் இலங்கையை ஆண்ட அரசன்; இவன் ஸ்ரீ ராமபிரானின் மனைவியாகிய சீதா தேவியைக் கவர்ந்து சென்றவன்; பிறகு ராமனுல் தோற்கடிக்கப்பட்டவன் என்று கூறுவீர்கள்.

நீங்கள் சொல்லுவது சரிதான். ஒருவன் எவ்வளவுதான் கெட்டவனுகக் கணக்கிடப்பட்டாலும், அவனிடம் சில நல்ல குணங்களும உண்டு. அவற்றையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்..

இராவணன ஒரு சிறந்த சிவபக்தன். விநாயக பக்தன்· இவன் சிவனுக்காக, நம் விநாயகப் பெருமானுக்காக திருககோகாணம் என்னும் ஊரில் பெரிய

கோவில் கட்டியுள்ளான். உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? அந்த வரலாற்றைக் கூறுகின்றேன் கேளுங்கள்.

ஒருமுறை, இலங்காபுரியின் ஏகச் சக்ராதிபதியான இந்த இராவணன் சிவபெருமானிடம் பல அரிய வரங்களைப் பெற எண்ணினான். அதற்காக புஷ்பக விமானத்தில் கைலைக்குச் சென்றான்.

சிவபிரானை மனதிலே கொண்டு, அரிய தவத்தினைத் தொடங்கினான். கானத்தால் கங்காதரனைக் கவர்ந்த இராவணன், கடுந்தவத்தால், பகவானது மனதைக் குளிரச் செய்தான்.

செஞ்சடைத் தம்பிரான், இடப வாகனத்தில் அவன் முன்னால் எழுந்தருளினார். இராவணன் அவரை வணங்கினான். ஆனந்தால் போற்றித் துதி செய்தான்.

பரபசிவன் நேசமுடன் பக்தனைப் பார்த்து "இலங்கேஸ்வரா! உன் தவம் எம்மை ஆட்கொண்டு விட்டது. வேண்டும் வரம் கேள். உவந்தளிப்போம என்று திருவாய் மலர்ந்தருளினார்

இராவணன் பூரிப்பு பொங்க, "காசிநாதா! கங்காதரா! கருணாகரா! யுகங்களின் அந்திம காலத்தில் அண்டசராசரங்களும் அழிந்து போகும் தருணத்தில எமது இலங்கை மாநகரம் மட்டும் அழியாது நிலைத்திருக்கத் தக்க வரத்தினைத் தந்தருள வேண்டும" என்று பிரார்த்தித்தான்.

இலங்கையர் கோனின மதியற்ற மொழிகேட்டு, கேட்ட வரம் தந்தருளும் தயாபரன் "உன் விருப்பப்

படியே நடக்கக் கடவது" என்று அருளினார். அடியார்களின் அன்பிற்கும், பக்திக்கும் கட்டுப்பட்டவன் தானே கடவுள்! ஒரு சிவலிங்கத்தை இராவணனிடம் கொடுத்தார். இராவணன் அவ்வரிய புதையலை இரு கரங்களாலும் வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு, பணிவோடு நின்றான்.

பரமேசுரன் அவனைப் பார்த்து, "இச் சிவலிங்கத்தை உனது தலைநகரத்தில் பிரதிஷ்டை செய்து, வேதாகம விதிப்படி வழிபடுவாயாக! ஆனால்...ஒரு நிபந்தனை! இச் சிவலிங்கத்தை இங்கிருந்து எடுத்துச் செல்வதில் சில விதிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். மனத்தூய்மை வேண்டும்; சிவலிங்கத்தை வாகனத்தில் எடுதத்துச் செல்லுதல் கூடாது; கால் நடையாகவேதான கொண்டு செல்ல வேண்டும். அது மட்டுமல்ல; எக்காரணத்தைக் கொண்டும் சிவலிங்கத்தை மட்டும மண்ணில் வைத்துவிடக் கூடாது. நிலத்தில் வைத்துவிட்டால் எடுப்பதென்பது அசாத்தியம்" என்று ஆணையிட்டருளினார்.

சிவனுடைய நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டான் இராவணன். சிவபிரான் அவனுக்கு அருள் செய்து மறைந்தார்.

இராவணன், சிவனாரின் திருநாமத்தைச் சிந்தையிலே கொண்டு, சிவலிங்கத்தைக் கரங்களிலே தாங்கி, தனது நெடும் பயணத்தைத் தொடர்ந்தான் காடுகளையும், மேடுகளையும், மலைகளையும, காட்டாறுகளையும பாலைகளையும் பசுஞ்சோலைகளையும் கடந்து சென்று கொண்டேயிருந்தான்.

இவ்வாறு இராவணன், இலங்கைக்குச் சென்று கொண்டிருப்பதை உணர்ந்த அமரர் கோன், தனது பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று அஞ்சி நடுங்கினன். உடனே முப்பத்து முக்கோடி தேவர்களையும் அழைத்துககொண்டு கயிலை மாமலையை அடைந்தான்.

அத் திருமலையின் பொன் வண்ணக் கோயிலில் கணேசப் பெருமான், வைரமணி சிம்மாசனத்தில் தூய வஸ்திரமும், வைரம் பொன்மணி அணிகளும், நறுமணம் கமழும் தூய சந்தனமும் அணியப்பெற்று படைக்கலங்கள் தாங்கப் பெற்ற திருக்கரங்களோடு எழுந்தருளியிருந்தார.

அமரர்கோன் கணேச மூர்த்தியின் திருவடிகளைத் தஞ்சம் என்று அடைந்தான். அபிஷேக ஆராதனைகளால் வழிபட்டான்.

"விக்னேசுரா! சிவபெருமானின் அருளைப்பெற்ற இராவணன், சிவலிங்கத்துடன் இலங்கைக்குச் சென்று கொண்டிருக்கிறன். அவன் அதனை அங்கு பிரதிஷ்டை செய்து, வழிபடத் தொடங்கிவிட்டால், எங்கள் குலம் தழைக்காது; அவன் ஆதிக்கம் மூவுலகங்களிலும் நிரந்தரமாகி விடும். தேவரீர் சித்தம் இரங்கி. லிங்கத்தோடு புறப்பட்டுச் செல்லும் இலங்கேசுரனுக்கு ஏதாகிலும் விக்னத்தை விளைவித்து, லிங்கத்தை வழியில் எங்காவது வைக்குமாறு செய்து விட வேண்டும். எளியோனை எங்ஙனமாவதும் காத்தருளித் திருவருள் புரியவேண்டும்" என்று மெய்யுருக விண்ணப்பிததான்.

ஆனைமுகப் பெருமான், அமரர் கோனின் விண்ணப்பத்தை ஏற்று, அவர்களைக் காக்கத் திருவுள்ளங்கொண்டார். இந்திரனும் மற்ற தேவாதி தேவர்களும் மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்து கொண்டு, அமரலோகம் சென்றனர். ஆனைமுகப் பெருமான் ஓர் அந்தணச் சிறுவனைப் போன்ற தோற்றத்தைக் கொண்டார். இராவணன் செல்லும் வழியே எதிர்ப்பட்டார்.

அத்தருணத்தில் இராவணன், உடல் நலத்திற்கான ஒரு சில கடனைக் கழிப்பதற்காக லிங்கமும், கையுமாகத் தத்தளித்துக் கொண்டிருந்தான்.

மனித உள்ளத்திற்கான கடன் வேதாகமங்களைக் கற்பது, கேட்பது, உருவேற்றுவது போன்ற வழிபாடுகள். உடலுக்காக என்பது தேக ஆரோக்கியமுடன் இருத்தல். சிறுநீர் கழிப்பது போன்ற கடன்கள்.

இராவணனுக்கு சிறுநீர் கழிக்க வேண்டும் போலிருந்தது. இராவணனுக்குச் சிறுநீர் உபாதை ஏற்படுவதற்குக் காரணம், விநயாகப் பெருமானின் ஆணைப்படி வருணன் இராவணன் வயிற்றில் ஜல உபாதையை உருவாக்கினான் என்பது வரலாற்று.

அப்பொழுது, விநாயகர் அவன் பக்கமாக வந்தார். விநாயகரின் தோற்றத்தைப் பார்த்து ஒரு அந்தணச் சிறுவன் என்று எண்ணிவிட்ட இராவணன் மட்டில்லா மகிழ்ச்சி பொங்க, விநாயகரை அழைத்தான்.

"குழந்தாய்! இந்த லிங்கத்தைச் சற்று நேரம் வைத்திருப்பாயாக! யாம் காலைக் கடன்களை முடித்

துக்கொண்டு வருகிறேன்" என்று இராவணன் வேண்டியதும், விநாயகர் மகிழ்ச்சி பொங்க "ஆஹா அதற்கென்ன தடை" என்றார்.

இராவணன் லிங்கத்தை விநாயகரிடம் கொடுத்தான். உடனே விநாயகர், "என்ன இது! கனம் அதிகமாக இருக்கிறதே! என்னால் இந்த லிங்கத்தைக் கையால் சுமந்து கொண்டு வெகுநேரம் நிற்க முடியாது" என்றார்.

"ஒரு நொடிப் பொழுதில் வந்து விடுகிறேன்"

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நான் மும்முறை குரல் கொடுப்பேன். நீங்கள் வரவில்லை என்றால் லிங்கத்தைப் பூமியில் வைத்து விடுவேன் பிறகு என்மீது வருத்தமோ, கோபமோ கொள்ளக் கூடாது."

"உடனே வந்துவிடுவேன்" என்று திரும்பவும் உறுதிமொழி சொன்ன இராவணன், விநாயகரின் நிபந்தனையை வெறும் குழந்தை மொழி என்று கருத்தில் கொண்டு அலட்சியமாகச் சென்றான்.

இராவணன் சென்ற சில விநாடிகளுள், விநாயகர் மும்முறை குரல் கொடுத்தார்; இராவணன் வரவில்லை; சொன்னதுபோல சிவ லிங்கத்தைப் பூமியில் வைத்தார்.

இராவணன், அவசர அவசரமாக கால்களைச் சுத்தம் செய்து கொண்டு ஓடோடி வந்தான். விநாயகரின் செயல் கண்டு மனம் பதறினான். தமது அரிய பலத்தால் லிங்கத்தை எடுக்க முயன்றான். முடியவில்லை. மீண்டும் மீண்டும் முயன்றான்; தோல்வியையே கண்டான்.

இராவணனின் பரிதாப நிலை கண்டு, பால விநாயகர் புன்னகை புரிந்தார். இராவணனுக்குக் கோபம் பொங்கியது. "செய்த தவற்றையும் செய்து விட்டு சிரிக்கவா செய்கிறாய்" என்று கூறியவாறு, விநாயகரின் தலையில் ஓங்கி குட்டினான்.

அப்பொழுது விநாயகர், அந்தணத் தோற்றத்தை மறைத்து படைக்கலங்கள் தங்கப் பெற்ற தும்பிக்கை விநாயகராகக் காட்சி அளித்தார்

இராவணன் அஞ்சி நடுங்கினான். விநாயகரின் இராவணனின் உடலை விண்ணிலும், மண்ணிலும், பாதளத்திலும் மாறி மாறி துள்ளி வீழ்ந்து உருளு மாறு செய்தார்.

இராவணன், நிலத்தில் வீழ்ந்ததும், விநாயகரின் திருவடிக் கமலங்களைத் தஞ்சம் என்று பற்றிக் கொண்டான். "சுவாமி! அடியேனை இன்னும் பந்தாடாதீர்கள். பிழையைப் பொறுத்தருளுங்கள்" என்று கண்களில் நீர் மல்க இறைஞ்சினான்.

அகந்தை அடங்கிய இராவணன் மீது கனிவு பூண்டார் கணேச மூர்த்தி! அவனை உருட்டி விளையாடுவதை நிறுத்தினார்.

பின்னர், அவனைப் பார்த்து, "இராவணா! என் சிரசின் மீது எப்படிக் குட்டினாயோ அதேபோல் உன் தலைமீதும் நீயே குட்டிக் கொள்வாயாக!" என்று ஆணையிட்டார். இராவணன் விநாயகரைத் தியானித்தவாறு இருபது கரங்களினாலும் பத்துத் தலைகளின் மீதும் பலமுறை ஓங்கிக் குட்டிக்கொண் டான் இரத்தம் பெருகியது.

இராவணனுடைய தலையாய பக்திக்கு உளங் கனிந்து, "உன்னைப்போல், எம்மைத் தியானித்து தலையிலே குட்டிக் கொள்வோர்க்குத் தலைக்கு மேல் ஆபத்து வந்தாலும் யாம் பனிபோல் விலகச் செய்து காத்தருளுவோம்." என்று திருவாய் மலர்ந்தார் விநாயகர். அவனுக்குப் பல வரங்களை அளித்தார்.

இராவணன் விநாயகர் காட்சி அளித்தத் திருத் தலத்தில் விநாயகருக்குச் சிறந்த கோவில் அமைத் தான். அதுபோலவே சிவலிங்கப் பெருமானுக்கும் கோவில் அமைத்தான். சில காலம் அங்கு தங்கி யிருந்து விநாயகப் பெருமான் திருவருளையும், சிவ பெருமானின் திருவருளையும் பெற்று இலங்கைக்குச் சென்றான்.

இவ்வாறு இராவணனால் நிர்மாணிக்கப்பட்ட திருக்கோயில் திருக்கோகர்ணம் என்னும் ஊரில் உள்ளது.

"கோ" என்றால் பசு. கர்ணம் என்றால் காது.

பசுவின் காதைப் போன்ற குழைவு பட்ட சிவலிங்கம் அமைந்துள்ள காரணம் பற்றியே இவ் வூருக்குக் கோகர்ணம் என்ற பெயர் ஏற்பட்டது. இத்திருத்தலத்தில் கோயில் கொண்டுள்ள சுவாமி யின் பெயர் மகாபலேஸ்வரர். அம்மனின் பெயர் பெரியநாயகி.

இவ்வூர் பாடல் பெற்ற சிறப்புமிக்க தலம்.

விநாயகரால் இக்கோயில் தோன்றியதால் சுவாமிக்கு விநாயகலிங்கம் எனவும் மகாத்லிங்கம் எனவும் கோகர்ணலிங்கம் எனவும் பெயர் ஏற்

பட்டது. இங்குள்ள விநாயகரின் பெயர் விப்பிர விநாயகர் என்பதாகும்.

பிள்ளைகளே! உங்கள் ஒவ்வொருவருக்கும் எத்தனையோ பெயர்கள் உண்டு. வீட்டில் அம்மா, அப்பா ஒரு செல்லப் பெயர் இட்டு அழைப்பர். பள்ளிக் கூடத்திற்குச் சென்றால் அங்கு ஆசிரியர் ஒரு பெயரைச் சொல்வார். உன் உடன் படிக்கும் மாணவர்கள், பட்டப்பெயர் ஏதாகிலும் சொல்லி அழைப்பர்.

இப்படி நமக்கு பல பெயர்கள் அமையும்போது நம்மைப் படைத்த பரம்பொருளுக்கு எத்தனை பெயர்கள் இருக்கும்.

எங்கும் ஒரே பரம்பொருள் என்பது பொதுவாக இருந்தபோதும், ஒரே சுவாமிக்கு பல கோவில்களில் பல்வேறு விதமான திருநாமங்கள் உண்டு. புராண வரலாற்றில் ஒவ்வொரு காரணகாரியம் பற்றியே சுவாமிக்கு அவ்வாறு திருநாமங்கள் ஏற்படுகின்றன

மயிலாப்பூர் சிவன் கோவிலில் உள்ள சிவன் பெயர் என்ன? கபாலீசுவரர். அம்மன் பெயர் என்ன? கற்பகாம்பாள்.

திருவானைக்காவல் சிவன் பெயர் என்ன? ஜம்பு கேசுரர். அம்மன் பெயர் என்ன? அகிலாண்டேஸ்வரி.

ராமேசுரம் கோயில் சிவனின் திருநாமம் இராமனுதசுவாமி. அம்மன் பெயர் பர்வதவர்த்தினி.

திருநெல்வேலி சுவாமியின் பெயர் நெல்லையப்பர். அம்மனின் பெயர் காந்திமதி அம்மன்.

திருவண்ணுமலைக் கோயில் சிவன் பெயர் அருணுசலேசுவரர். அம்மன் பெயர் உண்ணுமலை அம்மன்.

மதுரைக்கோயிலிலுள்ள சிவன் பெயர் சொக்க நாதர். அம்மன் பெயர் மீனுக்ஷி.

இவற்றிலிருந்து என்ன தெரிகிறது!

பகவான் பற்பல திருநாமங்களைப் பெற்று அங் கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த வடிவ மாய் காட்சி அளிக்கிருர். பக்தியுடன் போற்றிப் பணி யும் நம்மை எல்லாம் காத்து அருள்புரிகின்ருர் என் பது தெரிகிறது அல்லவா!



## 5. கர்வத்தை அடக்கிய கணபதி

உலகில் மனிதர்கள் சந்தோஷமாகவும், சுபிட்ச மாகவும் வாழ்வதற்குப் பல நல்ல குணங்களைக் கைக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான் வாழ்க்கையில் அவன் நிரந்தர வெற்றியைக் காண முடியும்! பிள்ளைகளாகிய உங்களுக்கு நல்ல போதனைகளைச் சொல்லி உங்களை மனிதனாக மாற்ற வேண்டும் என்பதற்காகத் தான் ஆத்திச் சூடி, கொன்றை வேந்தர், திருக்குறள் போன்ற நல்ல நீதி நெறி நூல்களைச் சின்ன வயதிலிருந்தே சொல்லிக் கொடுக்கின்றனர்.

மனிதர்களிடம் காணப்படும் பல தீய குணங்களில் அகங்காரம் என்பது ஒன்று! மனிதனிடம் அகங்காரம் மட்டும் இருந்தாலே போதும். அவன் அழிவிற்கு மிக்கச் சுலபமாக போய் விடுகிறான்.

எத்தனையோ அசுரர்கள் எத்தனையோ அரசர்கள், எத்தனையோ புலவர்கள், எத்தனையோ குடும்பத்

தலைவன், தலைவியர் அகங்காரத்தால் அழிந்து போனதை நாம் பல கதைகளில் படித்துள்ளோம்.

இவ்வாறு அகங்காரத்தோடு வாழ்பவர்களை ஆண்டவன் அடக்கி ஆட்கொண்ட வரலாறுகள் பல உண்டு.

நான், எனது என்று ஆணவத்தால், "நாராயணன் நாமத்தையே சொல்லக் கூடாது. இரணியாய நம: என்று என்னுடைய பெயரைத் தான் ஜெபிக்க வேண்டும் என்ற அகங்காரத்தால் அராஜம் புரிந்த இரணியன் என்னும் அரக்கன் கோமான் மகாவிஷ்ணுவால் அகந்தை அடக்கப் பட்டான்.

இவ்வண்ணம் அகங்காரத்தால் ஆட்சி புரிந்த அரசர்களுள் மிதிலாபுரியை ஆண்ட ஜனகன் என்பவனும் ஒருவன். இவனது அகம்பாவத்தை விநாயகப் பெருமான் அடக்குகிறார். அது எவ்வாறு என்று பார்ப்போம்.

தவச் செம்மல்களும் அறநெறி வழுவாப் பெரியோர்களும் வாழ்கின்ற மாண்புமிக்க மிதிலாபுரி என்னும் பட்டிணத்தை ஜனகன் என்ற அரசன் செங்கோல் ஒச்சி வந்தான். இம்மன்னன் பலகலை கள் பயின்றவன்.

அன்பு, ஈகை, ஒழுக்கம், வெற்றி முதலிய வற்றை பெற்றவன். இருப்பினும் அவனது உள்ளம் மட்டும் புலன் இச்சைக்கு அடிமையாகக் கிடந்தது அதனால் மன்னனின் ஞானக கண்கள் ஊனக் கண்களாய் இருந்தன. உண்மையான பரமஞான

தத்துவத்தை அவனால் உணர முடியவில்லை. தானே பரம்பொருள் என்று அகம்பாவம் கொண்டிருந்தான்.

ஒருநாள் நாரத மாமுனிவர் ஜனகனின் அரண்மனைக்கு வந்தார். மமதை கொண்ட மன்னன் அவரை முகமன் கூறி வரவேற்கவில்லை; தக்க இருக்கை அளிக்கவில்லை. வழிபாடு புரிந்து பாத பூசை புரியவில்லை. மாறாக ஆணவத்தால் அலட்சியப் படுத்தினான்.

மன்னனின் மதிக்கெட்ட செயலைக் கண்டு மாமுனிவர் மனம் தளரவில்லை. குறுநகை சிந்தினார். மன்னனைக் கனிவோடு நோக்கி, மன்ன! எம்பெருமானின் திருவருட்கருணையால் இம்மையில் நீ பெறத்தக்கச் செல்வமனைத்தையும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்றாய். வாரிக் கொடுக்கும் வள்ளல் என்று பெயர் பெற்றாய்! வெற்றி வீரனாய்த் திகழ்கின்றாய்! மேலும் இறைவனின் திருவருளால் சகல சௌபாக்கியங்களையும் பெற்று, சீரோடும், சிறப்போடும் நீ வாழ்வாயாக,, என்று அனுக்கிரகம் செய்தார்.

மாமுனி மொழிந்தது கேட்டு மாமன்னன் எள்ளி நகையாடினான். அவனது உதடுகள் ஆணவ வார்த்தைகளை உதிர்த்தன.

"நாதரே! உங்கள் அறியாமையை நான் என்னென்பது? தனியாகக் கடவுள் ஒருவர் உள்ளார் என்றும், அவர் எண்ணியதை ஈடேற்றும ஆற்றல் மிக்கவா என்றும் நீவீர் உரைப்பது விந்தையிலும விந்தை! திரிலோக சஞ்சாரியான நீவீர் பெற்ற

மெய்யறிவு இதுதானு! பேத புத்தி படைத்தவர் அன்ருே இத்தகைய வேதாந்தத்தை பேசுவர்! இப்பொழுதாவது உணரும்! எல்லாம் நானே! வாரிக் கொடுப்பவனும் நானே! கொள்பவனும் நானே! போகியும் நானே! யோகியும் நானே! மன்னனும் நானே! மக்களும் நானே! மரஞ்செடி கொடிசளும் நானே! எதுவும் நானே! எல்லாம் என்னுலே தான் நடக்கும்."

நாரத முனிவர், செவிகளைப் பொத்திக் கொண்டார். சினம் பொங்கியது. அங்கிங்கெனு தபடி எங்கும் பிரகாசமாய் இறைவடிவமாய் விளங்கும் பகவானின் திருவடியைக் காண முடியாத இந்த நாத்திகனுக்கு தக்க படிப்பினையைப் போதிக்க வேண்டும் என்று மனத்திலே எண்ணினுர் மாமுனிவர்.

"ஜனகா! உன் புத்தி பேதலித்து விட்டது பகவான் வேறில்லை என்று பேசிய உன் மதியீனத்தைத்தான் என்னென்பது! எல்லாம் நானே என்ற கர்வத்தை அடக்கி, பரம்பொருளை உன் மூளைக்கு உணர்த்தி உன்னை வெட்கித் தலை குனியச் செய்கிறேன். பிறகாவது உன் அகந்தை அடங்கட்டும். புத்தி தெளியட்டும்" என்று கூறி நாரதர் ஆத்திரத்தோடு அவ்விடத்தை விட்டுச் சென்ருர்.

அக்கணமே, நாரதா கவுண்டின்ய முனிவர் ஆசிரமத்திற்குப் புறப்பட்டார். நாரதரின் மகாயாழில் இனிய இசை எழுந்தது. இசையைக் கேட்டு மெய் யுருகிய முனிவர், நாரத முனிவர் வருவதைக் கண்டு எதிர் கொண்டு அழைக்க விரைந்தார.

பிறகு முனிவர் நாரதரை அழைத்துக் கொண்டு தமது பூஜை அறைக்குச் சென்றார். அங்கே எழுந்தருளியிருந்த கணேசப் பெருமானின் திருச் சன்னதியை வணங்கிய நாரதர், மகரயாழில் பக்திப் பாக்களை மழையெனப் பொழிந்தார்.

பின்னர் நாரதர் மெய்யுருக, பகவானிடம் "சுவாமி! மிதிலாபுரி மன்னன் ஜனகன், தான் என்ற அகந்தையால் தரணியை அரசாண்டு வருவதை ஐயன் அறியாததல்லவே. பூவுலக ஆட்சியும் அளவற்ற செல்வமும் தேவரிருடைய திருவருட் கருணையால் தான் பெற்றோம் என்பதைக்கூட அக்கொற்றவன் நினைந்தானில்லை. அதனால் தர்மத்தை மறந்தான். பெரியோர்களையும் புறக்கணித்தான். தேவரீர் என் விண்ணப்பத்தை ஏற்றருளி ஜனகனின் அகந்தையை அடக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

அக்கணமே விநாயகப் பெருமான் தன பக்தனின் வேண்டுகோளை நிறைவேற்றத் திருவுள்ளம் கொண்டார்.

அருவருப்பான தோற்றத்தோடு கூடிய ஏழை அந்தணராக வடிவங் கொண்டார். மிதிலாபுரிக்குச் சென்றார் மன்னனைக் கண்டார். மன்னன வந்திருப்பது இன்னாரென்பதை உணராது மமதையால், "என்ன வேண்டும்? எதற்காகஇங்கு வந்தீர்?" என்று கேட்டார்.

ஆனைமுகப் பெருமானின் கமலவதனத்தில் குமிழ் சிரிப்பு மலர, "மன்ன! என் பசியைத் தீர்க்க வேண்டும்,, என்றார்.

"அவ்வளவுதானே! அறுசுவை பண்டங்களோடு உண்டு மகிழும்" என்று கூறி தனது குமாரனை அழைத்து, அந்தணருக்கு அறுசுவை உணவு அளிக்குமாறு ஆணையிட்டான்.

ஜனக குமாரனும் உணவளிக்க உடன்பட்டான் அந்தணரை உள்ளே கூடத்திற்கு அழைத்துச் சென்றான். பாத பூஜை புரிந்து தூய ஆசனத்தில் அமரச் செய்தான். பணிந்து எழுந்தான். இரண்டு வாழைக் குருத்தை விரித்தான். அறுசுவை அமுதை அழகுற படைத்தவாறு "ஐயனே! திருவமுது செய்தருளுக!" என்று சொன்னான். பக்கத்திலே நின்று விசிறினான். அந்தணராக வந்த பெருமான் அத்தனை உணவையும் உட்கொண்டார்.

இக்காட்சிகளைக்கண்ட ஜனக குமாரன் திகைத்தான். பணியாட்கள் வியப்புற்றனர். விநாயகரோ மேலும் பசியுற்றார் போல் மன்னன் மகனின்முகத்தை நோக்கினார். அக் கணமே மன்னன் மகனும மடப் பள்ளியிலுள்ள உணவு வகைகள் அத்தனையையும் படைக்கச் செய்தான். அந்தணர் அவற்றையும் ஒரே வாயில் புசித்துப் பசிதீராதாற்போல் தோன்றினார்.

சமைத்தது, சமைக்காதது வெந்தது வேகாதது என்றவாறு எல்லா வகைப்பட்ட உணவுகளையும் கொண்டு வந்து படைத்தார்கள். அவற்றையும் முன் போலவே உண்டார். அந்நிலையிலும் அந்தணர் 'மேலும் போடுங்கள்" என்று கேட்க, ஜனக குமாரன் அரண்மனைக் களஞ்சியங்களைத் திறந்து

விட்டு, வேண்டியதை புசிக்குமாறு கூறினான். அக் களஞ்சியத்தையும் தின்று தீர்த்துவிட்ட வேதியர், "கொடுங்கள் இன்னும் என் பசி தணியவில்லை" என்றார்.

இந்நிகழ்ச்சி மன்னன் செவிக்கு எட்டியது. மன்னன் மலைத்தான. மக்களோ மருண்டனர். வேதியரோ பசியால் துடித்தார் போல் பாவனை புரிந்தார். அகோர பசியைத் தீர்க்க நகரத்து வீடுகளிலுள்ள உணவுகள் அத்தனையும் கொண்டு வந்து படைக்கப் பட்டன. அந்தணரின் பசியை மட்டும் தீர்க்க முடிய வில்லை.

அண்ட சராசரங்களையும தம்முள் அடக்கும் ஆதிபரம் பொருளான வக்ரதுண்ட விநாயகருக்கு இந்த உணவு எம்மாத்திரம்.

அந்தணரின் அகோரபசியோ ஆறியபாடில்லை. அரசர்க்கோ உணவுப் பொருள் சேர்ந்தபாடில்லை. இந் நிலையில் மக்கள், பசி தீராமல் இவ்வந்தணர் நம் மையும் புசித்து விடுவாரோ! என்று அஞ்சி ஓடி ஒளிந்தனர்.

மன்னன் மயக்கம் வரும் நிலைக்கு வந்தான். மந்திரிகளை அழைத்தான். "இவ்வந்தணருக்கு உணவு படைக்க இனியும் நம்மால் ஆகாது. யானை உண்ட விளாம் பழத்தைப் போல் நாடுகளிலுள்ள உணவுப்பொருள்கள் அனைத்தையும் உண்டுதீர்த்து விட்டார். இந்த நிலையில், இவவேதியரிடம் நயமாகப் பேசி வந்த வழியே அனுப்புவதுதான் சரியான யோசனை" என்றான் மன்னன.

மன்னனின் ஆலோசனையை அமைச்சர்களும் ஏற்றனர். ஆனால் வேதியரோ 'பசி, பசி!' என்று பறந்து கொண்டிருந்தார். மன்னன் வேதியரைப் பார்த்து "அந்தணரே! எம்மால் உமது கோரப் பசியைத் தீர்க்க முடியாது. உமது பசியைத் தீர்க்க வல்லார் யாரோ அவரிடம் செல்லுங்கள்" என்றான்

ஜனகன் சொல்வது கேட்டு விநாயகர் சினங் கொண்டார்.

"மன்ன! உன் சொல்லும் செயலும் மிக மிக நன்று! வரையாது வாரிக் கொடுக்கும் வள்ளல் என்று நம்பி வந்தேன். ஏமாந்தேன். என் பசிக்கு உன்னால் போதிய உணவு அளிக்க முடியவில்லை. அதே சமயத்தில் எரிகின்ற நெருப்பில் நெய் வார்ப்பது போல சிறிது கொடுத்து என் பசியை மிகுதியாக்கி விட்டாய். இத்தனையும் போதாதென்று பசியாற வேறு எங்காவது செல்வீராக என்று விரட்டுகிறாய்! இப்படி இருக்க எப்படித்தான் உன்னையே நீ பிரம்மம் என்றும் வேறொரு பிரமம் இல்லை என்றும் மார்தட்டி பேசிக் கொள்கிறாயோ? இரந்தவனுக்கு இல்லை என்று பேசும் நீ எப்படிப் பிரம்மமாவாய்! உனது பிரம்ம தத்துவத்துக்கு அனலிட்டு எரித்து சாம்பலாக்கு" என்று கோபமுடன்கூறிய அந்தணர் அரண்மனையை விட்டு வெளியேறினார்.

அந்தணர்சென்றதும் அரசர்மனம் குழப்பினான்

"வேதியரின் வார்த்தைகள் விந்தையாகவே இருக்கின்றனவே! சொற் செறியும், பொருட் செறிவும் மிகக அவரது செயல்களோ எங்ஙனமெல்

லாமோ சிந்திக்கத் தூண்டுகிறதே! இப்பெரியோரை இன்னாரென்று புரிந்துகொள்ள முடியவில்லையே" என்று பலவாறு எண்ணி உள்ளம் பேதலித்து புலம்பினான் மன்னன்.

இத்தருணத்தில் அரண்மனையைவிட்டு புறத்தே எழுந்தருளிய ஆனைமுகப் பெருமான், நேராகத் திரிசிரன் என்ற அந்தணனுடைய வீட்டிற்கு புறப் பட்டார்.

திரிசிரன் பகவானின் பாதார விந்தங்களைப் பற்றிய வாழும் தவச் செம்மல்! இவரது மனைவியின் பெயர் விரோசனை. வேதநெறி வழுவாத கணவனும் மனைவியும் இல்லறம் என்னும் நல்லறத்தை இனிது நடத்தி வந்தனர். பக்தர்களுக்குத்தான் சோதனை அதிகம் என்பது போல இத்தம்பதிகளுக்கும் பகவானின் சோதனை மிகுந்தது. தினமும் யாசகம் செய்து ஜீவனம் நடத்தி வந்தனர். யாசகம் செய்து தான் விநாயகருக்கு வழிபாடும் செய்தனர். கணவனும் மனைவியும் அனுதினமும் வைகறைப் பொழுது நீராடி கணேச மூர்த்தியின் திருநாமத்தை ஜபிப்பர். பின் அருகம்புல்லினால் வேதாகம விதிப்படி வழிபாடு புரிவர்.

ஒரு நாள், சோதனையாக விநாயகருக்கு நிவேதிப் பதற்குக் கூட யாசகமாக எதுவும் கிட்டவில்லை. அதனால், முனிவர் அருகம்புல்லையே நிவேதனமாகப் பகவானுக்குப் படைக்க எண்ணினார்.

வழக்கம் போல் திரிசிரன் வழபாட்டினைத் தொடங்க விரோசனை அடுத்திருந்து, வழிபாட்டுப்

பொருள்களை எடுத்துக்கொடுப்பதும், திருமஞ்சன நீர் வார்ப்பதுமான பற்பல தெய்வத் திருப்பணிகளில் ஈடுபட்டிருந்தாள்.

இந்த சமயத்தில், விநாயகர், இவர்கள் இல்லத்திற்கு அந்தணர் வடிவில் எழுந்தருளினுர்.

வழிபாட்டுத் தருணத்தில் வேதியர் வந்ததும் மனம் மகிழ்ந்த தம்பதியர் வாயிற்பக்கம் விரைந்து சென்று, இன்முகம் காட்டி, முகமன் கூறி வேதியரை வரவேற்றனர். பக்திப் பரவசத்துடன் உள்ளே அழைத்துச் சென்றனர். உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்தனர்.

பகவானது திருவடித் தாமரைகளை நன்னீரால் அபிஷேகம் செய்தனர். அருகம்புல்லினுல் அர்ச்சனை புரிந்தனர். பணிவன்போடு சிரமீது கரம் உயர்த்தி வணங்கி நின்றனர்.

தம்பதிகளின் வழிபாட்டால் மனங்கனிந்த கணேச மூர்த்தி, "மெய்யன்பர்களே! உங்கள் பக்திக்கும், அன்பிற்கும் யாம் பெருமகிழ்ச்சி கொள்கின்ரேம் நான் தற்போது பசி மிக்கவனுய் இருக்கின்றேன். உங்கள் நாட்டு வேந்தனிடம் பசி என்று உணவு கேட்டேன். அவனே சிறிது உணவை அளித்துவிட்டுச் சென்றுவா என்று என்னை அனுப்பி விட்டான். எனக்கு இன்னும் பசி தீர்ந்தபாடில்லை, நீங்கள் தான் என் பசியைப் போக்க வேண்டும்" என்று ஒன்றும் புரியாதவர் போல் விண்ணப்பித்தார்.

வேதியரின் வார்த்தைகளைக் கேட்டு, இருவரும் மனங் கலங்கினர்.

விரோசனை கண்களில் நீர் பெருக, "சுவாமி இதென்ன சோதனை? குளத்து நீர் முழுவதும் குடித்தும் தீராத தாகம், அக்குளத்திலிருந்து கொண்டு வரப்படும் துளி நீராலா தீரப் போகிறது? நாமோ, நேற்று முழுவதும் யாசகம் சென்றும் பொருள் ஏதும் கிட்டவில்லையே என்ற வேதனையுடன் வருத்தமாக இருக்கின்றோம். விநாயகருக்கு பூஜையை முடித்து நிவேதனம் செய்வதற்குப் புல்லைத் தவிர வேறு எதுவும் நம்மிடம் இல்லையே!" என்று வேதனையாகக் கணவரிடம் கூறினாள்:

அவள் கணவனிடம் மொழிந்தவற்றைக்கேட்டுக் கொண்டிருந்த விநாயகர் அகமும் முகமும் மலர்ந்தார்.

"பெண்டிற் திலகமே! அளவற்ற பணம்படைத்த குபேரர்கள் அன்பற்ற நிலையில் கணக்கற்ற செல்வத்தைக் கொடுத்தாலும், யாம் பெறமாட்டோம். ஆனால், உங்களைப் போன்ற அன்புடையவர்கள் அன்போடும், பக்தியோடும் எப்பொருளைக் கொடுத்தாலும் உவகையோடு ஏற்றுக் கொள்வோம். அதனால் கொடுப்போர்க்கு, நல்வினையும் பெறுவோர்க்குப் பெரும்புகழும் தானாகவே வந்தடையும். அருகம் புல்லை எவ்வாறு உண்ணக் கொடுப்பது என்று நீங்கள் சித்தம கலங்க வேண்டாம். அதனை உண்டு யாம் பசியைத் தீர்த்துக் கொள்வோம்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

விரோசனை விரைந்து சென்று அருகம்புல்லை எடுத்து வந்து பயபக்தியோடு விநாயகர் முன் வைத்தாள். விநாயகர் அதனை மகிழ்ச்சியோடு உண்டு திருப்தி அடைந்தார். ஒருவாறு அவரது பசியும தீர்ந்தது

அப்பொழுது, அனைவரும் வியக்கும் வண்ணம ஓர் அறபுத நிகழ்ச்சி நடந்தது.

திரிசிரனுடைய பழைய கூரை தரையோடு மறைந்து அடுக்கடுக்கான மாடிகளைக் கொண்ட மாளிகையாக மாறியது. அம்மாளிகை முழுவதும் தங்கமும், பொன்னும், வைரமும், மற்றும் பல விதமான பாண்டங்களும், பண்டங்களும், ஆடை அணி கலங்களும் பொங்கி வழிந்தன.

திரிசிரனும், விரோசனையும் மகிழ்ச்சியில் மூழ்கினர். அவர்கள் இருந்த அறையில் பேரொளி பிரகாசித்தது.

விநாயகப்பெருமான், அறுகையும், சந்திரனையும் தந்தமும் சூடிய மகுடம்-மழுப்படை தாமரை மலர் படிக மாலை, ஒற்றைக்கோடு ஆகியவற்றைத் தாங்கப் பெற்ற நான்கு திருக்கரங்கள், முப்புரி நூல் ஒளியிடும் அணி மார்பு, மறை முழங்கும தண்டைச் சிலமபணிந்த மென்சேவடிகள், மணி முடி ஜொலிக்கும் குண்டலம் மற்றும் கணக்கற்ற அணிகள் தோன்றும்படியாக காட்சி அளித்தார்.

கணவனும் மனைவியும், கணேச மூர்த்தியின் பாதகமலங்களைப் பன்முறை பணிந்து தொழுதனர். சுற்றி வலம் வந்தனர். ஆனந்தக் கூத்தாடினர்.

விநாயகர், அவ்விருவரையும் பார்த்து "அன்புடையீர்! நீவீர் இருவரும் இந்நகரில் நெடுங் காலம் சுகபோகத்துடன் வாழ்ந்து இறுதியில் எமது திருவடியில் வந்தடையும் பிறவாப் பேரின்பத்தைப் பெற்று உய்வீர்களாக, என்று திருவாய் மலர்ந்து அருளினர்.

திரிசிரன் வீட்டில் நடந்த இத்தனை சம்பவங் களும் காட்டுத் தீ போல் நாடு நகரமெங்கும் பரவியது மன்னனின செவிகளுக்கும் எட்டியது.

அக்கணமே மன்னன் மனம் மாறினன். அகந் தை ஒடுங்கினன். தன்னை விட பெரியதொரு சக்தி உண்டு என்பதை உணர்ந்தான். தனதவறறை மன்னிக்குமாறு விநாயகப்பெருமானை வேண்டினன்

மன்னன், திரிசிரன் இல்லத்திற்கு வந்தான். அங்கே மெய்யன்பர்களுக்கு ஆனந்தக் காட்சி கொடுத்தவாறு, அன்பர் உளளத்திலே கோயில் கொண்ட பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக் காட்சியைக் கண்டான்.

மன்னன் மெய் உருகினன். நிலத்தில் வீழ்ந்து விநாயகரின் திருவடியைப் பன்முறை வணங்கி வலம் வந்தான். கண்ணீர் ஆருகப் பெருகியது. சிர மீது கரம் உயர்த்தி "அருமறைகளாலும் அறி யொண்ணுப் பேரொளிப் பிம்பமே! ஞானத்தின் முதலே! இந்த எளியோனின பிழையைப் பொறுத் தருளுங்கள். நானே பிரம்மம் என்று ஆணவத்தினல் அறிவு மயங்கிக்கிடந்த என் மாயையை அகற்றி என் அகக் கண்ணைத் திறந்து ஆணவத்தை அடக்

கிய அருட்பிரகாச வள்ளலே! நின்மலர்ப் பொருளே உன் திருவருட் கருணையை என்னென்பேன்!" என்று உள்ளமும் உடலும் உருக விண்ணப்பித்து நின்றான் மன்னன்.

விநாயகர் உளங்கனிந்து அவனுக்குக் காட்சி கொடுத்து "அன்பனே உன் பிழையைப் பொறுத்தோம். என்ன வரம் வேண்டும் கேள்" என்று திருவாய் மலர்ந்தார்.

"அந்தணர் உருவில் வந்து என்னை ஆட்கொண்டருளிய ஞானப் பிரபுவே! இவ்வெளியேனுக்குப் பிறவாப் பேரின்பத்தை அடையும மார்க்கத்தை உபதேசித்து அருளி, தேவரீருடைய திருவடிகளில் என்றும் இருக்கும படியான பேற்றைத் தந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

கருணைக் கடலான கணேசமூர்த்தி மன்னனுக்கு தீட்சை செய்வித்து, தயிரிலிருந்து வெண்ணெயைக் கடைவது போல தத்துவ ஞானப் பெருங்கடலிலிருந்து சாரத்தையெல்லாம் திரட்டி, ஞான உபதேசம் செய்தருளினர்.

ஜனக மன்னனும் அகம்பாவம் நீங்கி அறிவும் தெளிவும் பெற்றான். அனைத்தும் ஆனைமுகப் பெருமானே என்ற உண்மையை உணர்ந்தான்.

ஆனைமுகப் பெருமானுக்கு ஆகம விதிப்படி வழிபாடுகள் பல புரிந்தான். தான தருமங்களை அளித்து உலகம் போற்ற பல காலம் அரசாண்டான். பின்னர் ஆனைமுகப் பெருமானின் திருவடிகளைப் போற்றும் பிறவாப் பெரும் பேற்றையும் பெற்றான்.

விநாயகர் அருளால் கோன் உயர்ந்தது குடியும் உயர்ந்தது. மிதிலாபுரியிலுள்ள மக்களுடைய இல்லங்கலெல்லாம் ஐசுவரியத்தால் ஆனந்தித்தன.

பிள்ளைகளே! இன்று முதல் நீங்களும் அகம் பாவம் இல்லாத அடக்கமான பிள்ளைகளாக வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். அடக்கம் தான் உயர்வை தரும.

அடக்கம் வரவேண்டும் என்றால் கர்வம் அடங்க வேண்டும்.

அடக்கமுடைமை என்பது நமக்குத் தேவையான ஒரு நல்ல அணி கலனாகும்.

அகந்தை இல்லாமையால் ஏற்படும் அடக்கத்தால் நாம் சகல மேன்மைகளைப் பெறுவதோடு பகவானின் அன்பிற்கும் பாத்திரராகலாம்.

நாம் உறுதியாக வாழ்வதற்கு அடக்கத்தைப் போல் உயர்ந்த செல்வம் வேறு எதுவும் கிடையாது.

வள்ளுவப் பெருந்தகையார் அடக்கத்தைப்பற்றி அடக்கமுடமை என்னும் அதிகாரத்தில்:

*ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்*
*எழுமையும் ஏமாப்புடைத்து.*

என்னும் குறளால் நன்கு விளக்கியுள்ளார்கள்

ஆமை தனது ஐந்து உறுப்பினையும் தன்னுள் எவ்வித இடர்பாடுமின்றி எவ்வாறு அடக்கிக் கொள்கின்றதோ அவ்விதம் பாவம் வந்து ஒருவனை அடையாதவாறு ஐம்புலன்களையும் அடக்கியாள

வல்லவனுனல் அஃது ஒன்றே அவனுக்குப் பல பிறப்பிலும் காப்பாகும் சிறப்புடையது.

இன்று முதல் நீங்கள் அடக்கமுடன் வாழ உறுதி கொள்ளுங்கள்.

அடக்கத்தின் மேன்மை உங்கள் வாழ்க்கையை வளமாக்கும்.

இதுவரைப் பிள்ளையார் கதைகளைப் படித்து படித்து பேரின்பம் பெற்ற நீங்கள் தினமும் பக்தி யுடன் பிள்ளையார் பாடலைப் பாடுங்கள். உங்களுக்கு நல்ல படிப்பும் பண்பும் தானுகவே வரும்.

ஆறுபடை வீடுதோறும் ஏறி மயில் ஏறி விளை யாடும் வேழமுகப் பெருமானின் சகோதரரான முருகப்பெருமானைக் செவிகுளிரக் கேட்டு மகிழ்ந்து திருப்புகழ் அமிழ்தத்தை நமக்கு அளித்தவர் அருண கிரிநாதர்.

*கைத்தல நிறைகனி யப்பமோ டவல்பொரி*
*கப்பிய கரிமுக னடிபேணி*
*கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ*
*கற்பக மெனவினை கடிதேகும்*

*மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்*
*மற்பொரு திரள்புய மதயானை*
*மத்தள வயிறனை உத்தமி புதல்வனை*
*மட்டவிழ் மலர்கொடு பணிவேனே*

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவனுறைரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா
அத் துயரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

அவருடைய இப்பாடலை தினமும் பாடுவோம் விநாயகர் பாதம் பணிவோம். சகலசுகங்களையும் பெறுவோம்.



